


# வினோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 22-23 TM

VINOLIA COMPANY LIMITED, LONDON, ENGLAND

# அழகின் சிறப்பு

## சருமசுகத்தின் மகிமையே



உங்கள் வசீகரம் பெரும்பாலும் மேனியழகை பொறுத்திருக்கிறது. மேனியழகு சருமசுகத்தினால் மட்டுமே ஏற்படுகிறது. சருமத்தைப் போஷிக்கும் குணமுடையதும் ஆன்டிஸெப்டிக்குமான தைலங்கள் சேர்ந்துள்ள கேடில் ரெக்ஸோனாவில் அடங்கியிருப்பதால் அது சருமத்தை ஆரோக்கியமாக வைத்துக் கொள்வதுமல்லாமல் சரும அழகு ஏற்படவும் உதவுகிறது. அதிசீக்கிரத்தில் தாராளமாயுண்டாகும் ரெக்ஸோனாவின் நுரை சருமத்திற்குள் சுகமளிக்கும் கேடிலை சேர்த்து ஆற்றலுடன் அழகையும் கொடுக்கின்றது. கேடில் கலந்துள்ள விசேஷமான சோப் இது ஒன்றே. அதனாலேயே, சருமத்தை மச்ச மறுக்களிலிருந்து பாதுகாத்து ஆரோக்கியத்தையளித்து ஒவ்வொரு மங்கையும் விரும்பும் மேனியழகைத்தரும் குணத்தை இச்சோப்புப் பெற்றிருக்கிறது.

ஆரோக்கிய பிருதியால் சோபையடையும் சருமத்தை முக்கியமாகக் கருதும் ஆடவர்கள், ரெக்ஸோனாவின் சுறுசுறுப்பளித்து சக்தியை ஊட்டும் திறமையை மெச்சுவார்கள். சுகமான சருமமேற்பட விரும்பும் ஆடவர்களுக்கு, ரெக்ஸோனா இன்றியமையாதது என்று உண்மையாக சொல்லலாம்.




குழந்தைக்கு ரெக்ஸோனா: குழந்தையின் மெல்லிய சருமத்தில் புண்கள், சினப்புகள் ஏற்பட வழியுண்டு. ரெக்ஸோனாவின் மருந்து சேர்ந்த நுரை சிறு கைகால்களை சாதாரண சரும வியாதிகளிலிருந்து காப்பாற்றுகிறது.

★ ரெக்ஸோனாவிலுள்ள கேடில், ஆன்டிஸெப்டிக்கும் சுகமளித்துப் போஷிக்கும் தன்மையுடையதுமான தைலங்கள் சேர்ந்த விசேஷ கலப்பு மருந்து. இம்மருந்து சருமப் பாதுகாப்பிற்கு ரொம்பவும் உத்தமமானது.

## சருமசுகத்திற்கு ரெக்ஸோனா

R.P. 31A-22-40 TM REXONA PROPRIETARY LIMITED



பத்தே நிமிஷத்திற்குள்




ஸாரிடோன்

எல்லா வலியையும் நிறுத்துகிறது




அரைக்கீரை விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்ந்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள் :

டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

●

மதராஸ் ஸிடி ஏஜண்டுகள் :

புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும் சோல் ஏஜண்டு :

B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 43

# என்ன சேதி?

## அந்தகன் ஆராய்ச்சி!

ஓர் இருட்டறை. அதில் கறுப்புப் பூனை எதுவும் இல்லை. ஆனால், அந்த அறையில் இல்லாத கறுப்புப் பூனையைத் தேடிப் பிடிப்பதற்காக ஓர் அந்தகன் அறையைச் சுற்றிச் சுற்றி அலைகின்றான். அந்தகன் பூனையைப் பிடிப்பது எக்காலமோ!

இந்தியப் பிரச்னையைத் தீர்க்க பிரிட்டிஷார் செய்து வரும் முயற்சியைப் பம்பாய் "நேஷனல் ஸ்டாண்டர்ட்" பத்திரிகை, மேற்கூறிய விதம் சித்திரித்திருக்கிறது. ரொம்ப பேஷான, பொருத்தமான வர்ணனை அல்லவா? இந்தியப் பிரச்னையைத் தீர்க்க பிரிட்டிஷார் முயற்சி செய்யும் ஒவ்வொரு தடவைக்குப் பின்னரும் இந்தியாவில் குழப்பம் பன்மடங்கு அதிகமாகிறதேயொழியக் குறையவில்லை. சர்தார் பட்டேல் சமீபத்தில் குறிப்பிட்டதுபோல், தாங்க முடியாத பொறுப்பை மட்டும் இடைக்கால சர்க்கார் தலையில் சுமத்தியிருக்கிறார்கள். அதிகாரமாகிற லகானக் கயிறு இன்னும் பிரிட்டிஷார் கையிலேயே இருக்கிறது.

ஒரே மந்திரி சபையில் ஒன்றுக்கொன்று நேர் முரணான இரண்டு கட்சிகள், ஜனங்களின் பிரதிநிதிகளான மந்திரிகளைத் துச்சமாக மதித்துக் கலகங்களைத் தூண்டும் கவர்னர்களின் ஆட்சி, இவை போன்ற அலங்கோலங்களை இந்தியாவைத் தவிர வேறெந்த தேசத்தில் காண முடியும்? மேற்படி அலங்கோலங்கள் ஒழிந்தாலன்றி இந்தியாவில் மேற் கொண்டு புதிய புதிய பிரச்னைகள் முளை விட்டுக் கொண்டேயிருக்கும். இது வரையில் பிரிட்டிஷ் சர்க்கார் ஒவ்வொரு தேதியிலும் விடுத்த வியாக்யானத்தின் விளைவாக விபரீதங்களே ஏற்பட்டிருக்கின்றன. ஆனால், ஜூன் மாதம் 2-ந் தேதி வெளியாகப் போகும் அறிக்கையும் புதிய பிரச்னைகளைக் கிளப்பி அதிகக் குழப்பத்தை உண்டு பண்ணப் போகிறதா, அல்லது உண்மையாகவே சமரசத்துக்கு அடி கோலப் போகிறதா? ஒரு வாரந்தானே, பொறுத்திருந்து பார்ப்போம்.

## எதிர்க்கும் சக்தி உண்டா?

காலவெள்ளத்தினாலும் அரசியல் சண்டமாருதத்தினாலும் அழிக்க முடியாத நாகரிகமும் கலாசாரமும் இவ்வுலகில் இருக்கின்றனவெனில், அவை இந்திய, சீன நாகரிகமும் கலாசாரமும்தான் என்பது சகலரும் ஒப்புக்கொண்டுள்ள உண்மை. இவ்வுலகில் அடுத்தடுத்துள்ள நாடுகள் எலியும் பூனையும் போல் தீராப் பகை கொண்டிருப்பதே சகஜமாக இருந்து வந்திருக்கிறது. ஆனால், இதற்கு விதி விலக்காக இருப்பது இந்தியாவும் சீனாவும்தான். தவிர, பல்வேறு அம்சங்களிலும் இரு நாடுகளுக்கும் உள்ள ஒற்றுமை ஆச்சரியகரமானது. ஜனத்தொகை, விஸ்தீர்ணம் முதலிய அம்சங்களில் சீனாவைப் போலவே இந்தியாவும் பிரம்மாண்டமானது. இந்தியாவில் 70 சத விகித ஜனங்கள் விவசாயிகளாக இருப்பது போலவே சீனாவிலும் பெரும்பாலான ஜனங்கள் விவசாயிகள். இவ்வாறாக பல விஷயங்களிலும் ஐக்கியத் தன்மையுடைய இரு நாடுகளுக்கும், அன்னியர் ஆதிக்கம் காரணமாக இதுவரையில் நெருங்கிய தொடர்பு இராமலிருந்தது. இந்தியாவில் இடைக்கால தேசிய சர்க்கார் ஏற்பட்டதிலிருந்து மீண்டும் இரு நாடுகளுக்கும் நெருங்கிய உறவு ஆரம்பமாகியிருக்கிறது. இதற்கு அறிகுறியாகச் சென்ற வாரம் டாக்டர் லோகியா லுவன் என்ற சீனப் பிரமுகர் இந்தியாவில் சீன சர்க்கார் ஸ்தானீகராக வந்துள்ளார். எண்பது கோடி ஜனங்களுக்கு மேல் வாழும் இவ்விரண்டு பிரம்மாண்ட நாடுகளும் ஒன்றுபட்டு நிற்குமாயின், அவற்றை எதிர்க்கும் சக்தி இந்த உலகத்திலேயே இல்லையென்று நிச்சயமாகக் கூறலாம்.

## ‘க்விட் இந்தியா’ விமானம் (இராப் பகலாகத் தயாராகிறது)



# கவியின் வாக்கு

*பலித்துவிட்டது!*

மகா கவியின் வாக்கு முற்றிலும் மெய்யாகி விட்டது.

ஓர் அட்சரம்கூடப் பொய்யாக வில்லை. நூற்றுக்கு நூறு உண்மையாகிவிட்டது.

தீர்க்கதரிசியும், சிறந்த ஞானியும், மகாகவியுமான ரவீந்திரநாத் டாகூர் அமர வாழ்வு பெறுவதற்கு ஐந்து மாதங்களுக்கு முன், அதாவது 1941-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 14-ந் தே... கூறிய வார்த்தைகள் இன்று ...ப உண்மையாகி விட்டன.

...சாம்ராஜ்யத்தை விட்டு ...டி பிரிட்டிஷாரைக் காலச் ...வற்புறுத்தும் காலம் ... ஆனால், அவர்கள் ... எந்த நிலையில் விட்டு ...ர்வார்களோ? எத்தகைய ...கடலில் தத்தளிக்க விட்டுப் ...வார்களோ? அதை நினைக்கும் போது என் உள்ளம் நடுநடுங்குகின்றது......'' என்று கண்ணீர் உகுத்தார் கவியரசர்.

தெய்வத் தன்மை பெற்ற ரவீந்திரரின் திருவாக்கு இன்று தத்ரூபமாகி விட்டது!

* * *

மகத்தான ஒரு நல்ல காரியத்தைச் சாதிக்கு முன் எத்தனையோ இடைஞ்சல்களைச் சமாளித்தாக வேண்டியிருக்கிறது.

தனிப்பட்டவர் வாழ்க்கையிலும் சரி, ஒரு தேசத்தின் வாழ்க்கையிலும் சரி, இது முக்காலத்தும் உண்மையாகும்.

எகிப்தில் பிரிட்டிஷ் அதிகாரம் அஸ்தமனமாகப் போவதைக் கண்டு எகிப்து மக்கள் சகலரும் ஆனந்த சாகரத்தில் மூழ்கி யிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

ஆனால், பிரிட்டிஷ் அதிகாரம் அடியோடு மறையப்போகும் இந்தியாவில் நிலைமை எப்படி யிருக்கிறது?

இரண்டு நூற்றாண்டுகள் அடிமை வாழ்வுக்குப் பின் சுதந்திரோதயமாகி யுள்ள இந்தியாவில், குதூகலத்துடனும் கொண்டாட்டத்துடனும் இருக்க வேண்டிய ஜனங்கள் சோகக் கடலில் ஆழ்ந்து தவிக்கின்றனர்.

* * *

ஓர் அசுரன் மாய்ந்தால் அவனது இரத்தத் துளிகளிலிருந்து எத்தனையோ அசுரர்கள் கிளம்புவார்கள் என்று கதைகள் உண்டு.

அதுபோலவே, மாண்ட அடிமைத்தன அரக்கனின் உதிரத் துளிகளிலிருந்து ஒன்று பத்து நூறாக எத்தனையோ பிரச்னைகள் கிளம்பி இந்திய மக்களை வாட்டி வதைத்துவருகின்றன.

அரசியல் கொந்தளிப்புகளின் கொடூரமானது இந்திய மகாஜனங்களையே உணர்ச்சியற்றுப் போகும்படி செய்திருக்கிறது.

இந் நிலைமையில் உணவு நெருக்கடியும், அதோ வெகு வேகமாக வந்து கொண்டிருக்கிற தென்று நமது மாபெருந் தலைவரும் இடைக்கால சர்க்கார் உணவு மந்திரியுமான ராஜேந்திர பாபு சொல்லியிருக்கிறார். அவரது மேற்படி எச்சரிக்கை இந்தியா முழுதும், குறிப்பாக இம் மாகாணத்திலும் பெரும் அதிர்ச்சியை உண்டுபண்ணி யிருக்கிறது.

அதற்குத் தகுந்தாற் போல, இரண்டொரு ஜில்லாக்களைத் தவிர சென்னை மாகாணம் முழுதும் அரிசி ரேஷன் பன்னிரண்டி லிருந்து பத்து அவுன்ஸாகக் குறைக்கப்பட்டிருப்பது, உணவு நெருக்கடி வர ஆரம்பித்து விட்டது என்பதையே காட்டுகிறது.

அந்த இரண்டொரு ஜில்லாக்களின் விகிதத்துக்கும் எட்டு அவுன்ஸ் அரிசியே கிடைத்திருக்கிறது.

மேற்கொண்டு அதையும் குறைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படாது

என்றும் நிச்சயமாகச் சொல்லுவதற்கில்லை.

துரதிர்ஷ்ட வசமாக வட இந்தியாவில் கோதுமை விளைச்சலுக்குச் சேதம் ஏற்பட்டு விட்டதால், குறைந்த அரிசி ரேஷனுக்கு ஈடாக கோதுமை கிடைக்கும் என்றும் எதிர்பார்ப்பதற்கில்லை.

ஐக்கிய நாடுகள் மகாசபையைச் சேர்ந்த உணவு, விவசாய ஸ்தாபனத்தின் ஆதரவில் அரிசி பரிசீலனைக் கோஷ்டி மகாநாடொன்று சென்ற வாரம் திருவனந்தபுரத்தில் நடந்தது. அதற்குப் பல்வேறு நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள்.

மேற்படி மகாநாட்டை ஆரம்பித்து வைத்த பாபு ராஜேந்திரர், உணவு நெருக்கடியால் கஷ்டத்துக்கு உள்ளாகி யிருக்கும் நாடுகளுக்கு உதவி புரிய வேண்டியது உலக ஸ்தாபனத்தின் இன்றியமையாத கடமை என்பதை வற்புறுத்தி யிருக்கிறார்.

வட இந்தியாவிலுள்ள பல விடங்களிலும் கலகங்கள் காரணமாகவும் தாவர நோய் காரணமாகவும் கோதுமை விளைச்சலுக்கு மிகுந்த சேதம் ஏற்பட்டு விட்டது.

அதிர்ஷ்டவசமாக, இம் மாகாணத்தில் அத்தகைய விபரீதங்கள் எதுவும் நேரவில்லை.

இம் மாகாணத்தில் நெல் விளைச்சல் மோசம் செய்துவிட வில்லை. விளைச்சலுக்கு வேறெவ்வித சேதமும் ஏற்பட்டு விடவில்லை. முந்திய வருஷத்தைக் காட்டிலும் நெல் விளைச்சல் திருப்திகரமாகவே இருந்திருக்கிறது.

ஆனால், மனிதனின் திறமையின்மையாகிற நோய்தான் இப்போது ஏற்பட்டுள்ள கஷ்டத்துக்குக் காரணம்.

அதாவது, திட்டமான முடிவோ தீர்க்காலோசனையோ எதுவுமின்றிச் சென்னை சர்க்கார் நெல் விலையை அடிக்கடி மாற்றி வந்ததே இப்போது விளைவாக முடிந்திருக்கிறது.

நெல் விலை மேற்கொண்டு அதிகமாகலாம் என்ற சபலம் காரணமாக உற்பத்தியாளர்கள் தங்கள் கைவசமுள்ள அதிகப்படியான நெல்லை விற்க மனம் கொள்ளவில்லை.

எனவே, உற்பத்தியாளர்களின் மனோநிலைமை மாறினாலன்றி, பத்து அவுன்ஸ் ரேஷன்கூட அதிக காலம் நீடிக்க முடியாது என்று பாபு ராஜேந்திரர் எச்சரித்திருக்கிறார்.

நெல் விலை இனி உயர இடமில்லையென்பதையும் ராஜேந்திரர் தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

* * *

நெல் விலையை உயர்த்தினால், விலைக்கு அரிசி வாங்க வேண்டி யிருக்கும் ஏழை ஜனங்களுக்குக் கஷ்டம் ஏற்படுகிறது. எனவே, அதிகச் சம்பளம் வேண்டும் என்ற கோரிக்கை எழுகின்றது. பின்னர் பொதுவாக சகல பண்டங்களின் விலைகளும் அதிகமாகி விடுகின்றன. கடைசியில், நெல் விலை உயர்வின் பலனை உற்பத்தியாளர்கள் அனுபவிக்க முடியாமற் போய்விடுகிறது.

நெல் விலையை உயர்த்துவதால் கோரிய பலன் கிடைப்பதில்லை என்பதை விளக்குவதற்காகவே, பாபு ராஜேந்திரர் மேற்படி உண்மைகளை எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

ஆகையால், நெல் விலை உயரும் என்ற எண்ணத்தை இனியாவது உற்பத்தியாளர்கள் விட்டு விட்டு, தங்கள் வசமுள்ள அதிகப்படியான நெல்லை சர்க்காருக்குக் கொடுத்து உதவ வேண்டும்.

இது அற்ப சொற்பமான விஷயமல்ல. கோடிக் கணக்கான ஜனங்களின் உயிரையும் உடலையும் வதைக்கும் உணவுப் பிரச்னைக்கு ஓரளவாவது பரிகாரம் தேடுவது உற்பத்தியாளர்களின் கையில்தான் இருக்கிறது.

இந்த ஆபத்தான சமயத்தில் சர்க்காருக்கு அல்ல, கோடிக்கணக்கான ஜனங்களுக்கு உதவ அவர்கள் முன்வராவிடில், மனிதர் உணவை மனிதர் பறித்த மகா பாதகத்துக்கு உள்ளாவார்கள்.

சேமிப்பு நெல்லைப் பதுக்கி வைக்கும்படியோ, அல்லது சத்தியாக்கிரகம் செய்யும்படியோ தூண்டும் பிருகஸ்பதிகளின் துஷ்பிரசாரத்துக்கு யாரும் செவி கொடுத்து மோசம் போகமாட்டார்கள் என்றே நம்புகிறோம்.

''ஒரு மணங்குக்கு எவ்வளவு அதிக விலை கேட்கலாம் என்பது உற்பத்தியாளர்களின் சிந்தனையாக இருக்கக் கூடாது; ஒரு ஏக்கருக்கு எவ்வளவு அதிக நெல் உற்பத்தி செய்யலாம் என்பதே அவர்களுடைய சிந்தனையாக இருக்க வேண்டும்'' என்று இடைக்கால சர்க்கார் உணவு மந்திரி கூறியிருப்பதைச் சகலரும் கவனிக்க வேண்டும்.

மகத்தான நெருக்கடி ஏற்பட்டுள்ள இச்சமயத்தில் அவர்கள் தங்களுடைய கடமையைச் செய்யத் தவறுவது பெரும் குற்றமாகும்.

* * *

“உணவுப் பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்க!” என்ற பிரசாரம் ஒருபுறமிருக்க, அவ்விஷயமாக நேரடியான தீவிர முறைகளை எடுத்துக் கொள்ள வேண்டியதும் சர்க்கார் கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

உதாரணமாக, தரிசாகக் கிடக்கும் பிரதேசங்களைப் பண்படுத்தி வேளாண்மைக்குத் தகுதி உள்ளதாகச் செய்ய வேண்டும்; விவசாயிகளுக்குக் குறைந்த விலைக்கு ஏராளமாக எருக்கள் கிடைக்கும்படி செய்ய வேண்டும்; பொதுவாக விவசாய அபிவிருத்திக்கான நவீன முறைகளைக் கைக்கொள்ள உதவியளிக்க வேண்டும்.

இந்திய ஜனத்தொகையில் 70 சதவிகித பேர்கள் விவசாயிகளாக இருந்தும், உணவுப் பொருள்களுக்குக்கூட சயாம், பர்மா போன்ற சுண்டைக்காய் நாடுகளை இந்தியா எதிர்பார்த்து வந்திருப்பது வெட்கக்கேடாகும்.

உலகிலேயே நெல் வயல்களின் விஸ்தீரணம் இந்தியாவில்தான் மிகவும் அதிகம். அப்படியிருந்தும் நமக்குப் போதிய அளவு நெல் கிடைக்காததற்குக் காரணம் உருப்படாத வேளாண்மை முறைகள்தான்.

இந்தியாவில் நெல் விளையும் பிரதேச விஸ்தீரணத்தில் பாதிதான் சீனாவில் இருக்கிறது. அப்படியிருந்தும் இந்தியாவைக் காட்டிலும் அதிகமாக சீனாவில் நெல் விளைகின்றது. எனவே, அதே நவீன விவசாய முறைகள் இந்தியாவிலும் கைக்கொள்ளப் படுமாயின், இன்று இந்தியா தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதுடன், பிற நாடுகளுக்கும் அரிசி ஏற்றுமதி செய்யும்படியான நிலைமையில் இருக்குமென்பது நிச்சயம்.

மற்றத் துறைகளில் இந்தியா பிற்போக்கான நிலையில் இருப்பது போல், விவசாயத் துறையிலும் இருப்பது மக்களின் துர்ப்பாக்கியமே.

கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவார் உண்டா!

இதர நாடுகளில் கோதுமை உற்பத்தி அபரிமிதமாக அதிகரித்திருப்பதற்கு விஞ்ஞானிகளின் ஆராய்ச்சியும் சர்க்கார்களின் உதவியுமே காரணம். அத்தகைய அபிவிருத்தி முறைகள் இந்தியாவிலும் முன்பே கைக்கொள்ளப்பட்டிருக்குமாயின், இன்று ஆசியா நாடுகளுக்கே இந்தியா வற்றாததொரு நெல் களஞ்சியமாகத் திகழும்.

ஆனால், தாங்கமுடியாத நிலவரிப் பளுவைச் சுமத்தி விவசாயிகளைக் கசக்கிப் பிழிந்து வந்த பிரிட்டிஷ் ஆட்சி முறையில், முன்னேற்றகரமான நவீன விவசாய முறைகளைக் கைக்கொள்ள வழியே இராமற் போய்விட்டது.

எனவே, இவ்விஷயமாக இனிமேல் தான் கதிமோட்சம் ஏற்பட வேண்டும். கதிமோட்சம் ஏற்படும் என்பதிலும் சந்தேகமில்லை.

* * *

எனினும் இருநூறு வருஷங்களாகச் சீர்குலைந்து வந்துள்ள அரசியல், பொருளாதார அலங்கோலங்களை இரண்டு மாத காலத்திலோ, அல்லது இரண்டு வருஷ காலத்திலோ சீர்படுத்திவிட முடியாதென்பதைச் சகலரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். மகத்தான பிரச்னைகளைச் சமாளிப்பதற்குப் போதிய அவகாசம் அளிக்காமல் சர்க்கார்மீது குறை கூறிக் கொண்டிருப்பதால் யாருக்கும் எவ்விதப் பலனும் ஏற்பட்டு விடாது.

உணவு நெருக்கடியைச் சமாளிக்கும் விஷயத்தில் இடைக்கால தேசிய சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகளை அற்பமென்று கருதுவதற்கில்லை.

வெளி நாடுகளிலிருந்து உணவு தானியங்கள் வாங்குவதற்காக இந்திய சர்க்கார் நூறு கோடி ரூபாய் போட்டிருக்கிறார்கள். இதைத் தவிர, இறக்குமதியான தானியங்களின் விலைகள் அதிகமாகி விடாமல் இருப்பதற்காக சுமார் இருபத்தைந்து கோடி ரூபாய் வரையில் செலவழித்திருக்கிறார்கள். உணவுப் பொருள்கள் உற்பத்தியில் தீவிரமாக ஈடுபடும் மாகாணங்களுக்குப் பெருந் தொகை உதவியளிக்கவும் முன் வந்திருக்கிறார்கள்.

எனவே, தற்காலிகமான இந்த நெருக்கடியைச் சமாளித்து வெற்றி பெற சகலரும் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டியது அத்தியாவசியமாகும்.

# அபலையின் கண்ணீர்

## கல்கி

### ஆறாம் பாகம்

வனஜாவுக்காகவும் அவளுடைய நன்மைக்காகவும் தேசபக்தன் சிவராஜன் இரக்கப் பரிந்து பேசியதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் நடராஜின் முகத்தில் பொருள் பொதிந்த புன்னகை பூத்தது. அவர் ஏதோ சொல்ல ஆரம்பித்த சமயத்தில், கீழே கிணுகிணு என்று மணிச் சத்தம் கேட்டது.

“சிவராஜ்! யாரோ என்னைப் பார்க்க வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது. இதோ ஐந்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன்! அதற்குள் நீயே இந்தப் பெண்ணரசியை முடிவாகக் கேட்டு விடு; இன்னும் ஏதாவது சொல்வதற்கு உண்மை பாக்கி வைத்திருக்கிறாளா, அல்லது எல்லாவற்றையும் சொல்லித் தீர்த்து விட்டாளா!”— இப்படி இன்ஸ்பெக்டர் சொல்லி விட்டுக் கீழே இறங்கிச் சென்றார்.

அவர் மறைந்ததும் சிவராஜன் வனஜாவைப் பார்த்து, “போலீஸ்காரர்களின் சுபாவமே இப்படித்தான். அவர்கள் மனதிலிருந்து ஈவிரக்கம், பச்சாத்தாபம் எல்லாவற்றையும் துடைத்து விட்டுத்தானே போலீஸ் உத்தியோகத்துக்கு வருகிறார்கள்? வனஜா! நீ வருத்தப்பட வேண்டாம். உன் பேச்சில் எனக்கு லவலேசமும் சந்தேகமில்லை. என் சிநேகிதரின் முரட்டுப் பேச்சுக்காக நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்!” என்றான்.

இந்த வார்த்தைகள் வனஜாவுக்கு ஆறுதல் தருவதற்குப் பதிலாக அவளுடைய துயரத்தை அதிகமாக்கியதாகக் காணப்பட்டது. ஏனெனில், வனஜாவின் கண்ணீர்ப் பெருக்கு அதிகமாயிற்று. முயற்சி செய்து விம்மலை அடக்கிக் கொண்டு, “ஐயா! உங்கள் சிநேகிதர் மீது அன்றைக்கு ஏதேதோ அபாண்டம் சொன்னேன். அதெல்லாம் பெரும் பாவம். நான் முதல் நான் சொன்ன பெரிய மனிதர் ஊரிலேயே இல்லை என்று தெரிந்த பிறகு, உங்களை நம்பச் செய்வதற்காக யாரையாவது சொல்ல வேண்டுமே என்று யோசித்தேன். இவருடைய பெயர்தான் ஞாபகம் வந்தது. உண்மையில் இவர் அன்றைக்குத் தக்க சமயத்தில் வந்து தங்கள் உயிரைக் காப்பாற்றினார்! என்னுடைய அறிவீனத்தினால் தங்களுக்கு ஏற்பட்ட பெரும் அபாயத்தை நிவர்த்தி செய்தார்! இவர் மட்டும் அப்போது வந்திராவிட்டால்......?” என்று சொல்லி மேலே பேச நா எழாமல் வனஜா விசித்தாள்.

சிவராஜன் அன்பு ததும்பிய குரலில், “வனஜா! நடந்தது நடந்து விட்டது. இனிமேல் அதைப்பற்றி வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்? இப்போதாவது நீ உண்மையை உள்ளபடி சொன்னது பற்றிச் சந்தோஷம். இல்லாவிடில் இந்த இன்ஸ்பெக்டர்தான் பின்புறமாக வந்து என்னைத் தாக்கியவர் என்றே நம்பிக் கொண்டிருப்பேன். இன்னுங்கூட எனக்குச் சந்தேகமாய்த்தானிருக்கிறது; ஒரு வேளை போலீஸ் இன்ஸ்பெக்டராயிற்றே என்று பயந்து உண்மையை மறைக்கிறாயோ என்று. இவர் இல்லை என்றால், வேறு

யார் என்னை அங்கே வந்து தாக்கியிருக்க முடியும்? கண்டிராக்டர் துரைராஜாவாகத்தான் இருக்க வேண்டும். வனஜா! உண்மையைச் சொல்லு! நீ எனக்கு முன் பக்கம் நின்றுகொண்டிருந்தாய், ஆகையால் பின்னால் வந்து என் மண்டையில் அடித்த மனிதனைப் பார்த்திருப்பாய்! அவன் தனராஜ் இல்லையென்றால், வேறு யார்?" என்றான்.

இதைக் கேட்டதும் வனஜாவின் முகத்தில் உண்டான பீதியின் தோற்றம் சிவராஜனையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது. இன்னும் எதையோ மறைக்கப் பார்க்கிறாள் என்று தனராஜ் சந்தேகப் பட்டதில் உண்மை இருக்குமோ என்றுகூடத் தோன்றியது.

சற்றுப் பொறுத்து வனஜா, "ஐயா! சத்தியமாய்ச் சொல்கிறேன். தங்களை அடித்தது, இந்த இன்ஸ்பெக்டர் தனராஜ் அல்ல. அவ்வளவுதான் நான் சொல்ல முடியும். தாங்களும் என்னைச் சந்தேகித்தால் என் கதி அதோ கதிதான்!" என்றாள்.

தன்னுடைய கேள்விக்கு முழு பதிலும் அவள் சொல்லவில்லையென்பதைச் சிவராஜ் உணர்ந்தான். ஆயினும் அவளை மேலும் கேள்வி கேட்டு அழச் செய்ய அவன் விரும்பவில்லை. எனவே, "உன்னை ஒரு நாளும் சந்தேகிக்க மாட்டேன், வனஜா! தயவு செய்து மனதைத் தைரியப்படுத்திக் கொள். நீ கண்ணீர் விடுவதைப் பார்த்து என்னால் சகிக்க முடியவில்லை. இந்த நாலு நாளாக, நான் பிழைப்பேனோ மாட்டேனோ என்ற சந்தேகத்தில் இருந்தபோதுகூட, எனக்கு உன்னுடைய நினைவாகவே இருந்தது!" என்றான்.



"எனக்கும் அப்படித்தான், ஐயா! இந்த நாலு நாளாகத் தங்களை ஒரு கண நேரம் கூட நான் மறக்கவில்லை. தப்பித் தவறித் தூங்கினால்கூடத் தங்களைப் பற்றித்தான் கனவு!" என்றாள் வனஜா.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சிவராஜன் சொர்க்கலோகத்துக்கே போய் விட்டான். வேறு எது எப்படிப் போனால் என்ன என்று எண்ணிவிட்டான். திக்கற்ற அபலைப் பெண்ணாகிய இந்த வனஜாவையும் இவள் தங்கை அம்புஜத்தையும் காப்பாற்றுவது கடவுள் தனக்கு அளித்திருக்கும் தனிப் பொறுப்பு என்று கருதினான்.

தேசமாவது? பொது நன்மையாவது? தன்னைப்போல் எத்தனையோ பேர் தேசத்துக்கு உழைப்பதற்கு இருக்கிறார்கள்! ஆனால் ஏழை வனஜாவுக்குத் தன்னைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்? மேலும் சீக்கிரத்தில் தேசம் சுதந்திரம் அடையப் போகிறது! இங்கிலீஷ்காரன் பிரயாணப்படுவதற்குத் தேதிகூடக் குறிப்பிட்டு விட்டான். இனிமேல் வனஜாவைப் போன்ற அபலைப் பெண்களைப் பாதுகாத்து ரட்சிப்பதைக் காட்டிலும் தான் செய்வதற்கு வேறு என்ன சிறந்த தொண்டு இருக்கப் போகிறது?

இப்படியெல்லாம் சிந்தனை செய்துவிட்டு, சிவராஜன், "வனஜா! உன்னுடைய வீடு எங்கே இருக்கிறது? எனக்கு உடம்பு சௌகரியம் ஆனபிறகு நான் எப்போதாவது உன்னை வந்து பார்க்கலாமா?" என்று கேட்டான்.

இப்படிச் சிவராஜ் கேட்டு வாய் மூடுவதற்குள்ளே இன்ஸ்பெக்டர் தனராஜ் மச்சுப்படியில் 'டக் டக்' என்று ஏறி மேலே வந்தார்.

அவருக்குப் பின்னால், ஆஜானுபாகுவான ஒரு முரட்டு மனிதனும் வந்தான்.

வனஜாவும் அம்புஜமும் அந்த முரட்டு மனிதனைப் பார்த்தார்களோ இல்லையோ, உடனே "அப்பா!" என்று அலறிக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடிப்போய் அவனைக் கட்டிக்கொண்டு 'ஓ'வென்று கதறி அழுதார்கள்.

சிவராஜன் திக்குத் திசை புரியாதவனாய்த் திகைத்துப்போய் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சிறிது நேரம் மேற்படி நாடகம் நடக்கட்டும் என்று காத்துக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் தனராஜ், "போதும்! போதும்! நிறுத்துங்கள்! இந்த சினிமாவைப் பார்க்க இங்கே யாரும் டிக்கட் வாங்கிக் கொண்டு வந்திருக்கவில்லை!" என்று உரத்த சத்தம் போட்டுக் கூறினார்.

அதைக் கேட்டு வெட்கி வனஜாவும் அம்புஜமும் அலறலை நிறுத்தினார்கள்.

சிவராஜனைத் தனராஜ் பார்த்து, "அப்பனே! சற்று முன்னால் இந்தப் பெண் சொன்னதை நீ கேட்டுக் கொண்டிருந்தாயல்லவா? இவளை சினிமாவில் நடிப்பதற்கு லாயக்கில்லை என்று யாரோ ஒரு முட்டாள் டைரக்டர் சொன்னானாமே? உண்மையில், இந்தச் சகோதரிகள் இருவரும் தாங்களே கதை எழுதி, 'டயலாக்' எழுதி, முக்கிய பாத்திரங்களாக நடித்து, படத்தையும் டைரக்ட் செய்யத் தகுதியுள்ளவர்கள் அல்லவா?" என்று கேட்டார்.

பெருந் திகைப்பில் ஆழ்ந்திருந்த சிவராஜ், "இன்ஸ்பெக்டர், சார்! போதும், நிறுத்துங்கள்! உண்மையாகட்டும், பொய்யாகட்டும்;—என் முன்னால் பெண்களைப் பரிகசித்து அவமதிப்பதை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது!" என்றான்.

"நான் பரிகசிக்கவும் இல்லை, அவமதிக்கவும் இல்லையே? புகழ்ந்து பாராட்டியல்லவா பேசினேன்?" என்றார் தனராஜ்.

"இந்த மர்ம நாடகம் ஒன்றும் எனக்கு அர்த்தமாகவில்லை. இந்த மனிதன் யார்? இவனை எதற்காக அழைத்துக் கொண்டு வந்தீர்? இவனைக் கட்டிக் கொண்டு இவர்கள் ஏன் அழுகிறார்கள்?" என்று சிவராஜன் கேட்டான்.

"சரியான கேள்விகள்தான். ஆனால் இவற்றுக்கு என்னைவிட வனஜா தக்க பதில் சொல்லமுடியும்!" என்றார் தனராஜ்.

அழுகையை நிறுத்தியிருந்த வனஜாவின் காதில் மேற்படி வார்த்தைகள் விழுந்தன, அவள் தன் சேலைத் தலைப்பினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அவர்கள் இருந்த இடத்துக்கு அருகில் வந்தாள்.

"ஐயா! இவர் சொல்வதில் பிசகில்லை. தங்கள் கேள்விகளுக்கு நானே பதில் சொல்லுகிறேன். இவர்தான் எங்களுடைய தகப்பனார். நான் டைரக்டர் துரைராஜைப் போய்ப் பார்த்தது, தங்களுக்குக் கடிதம் எழுதியது முதலிய காரியங்கள் எல்லாம் இவருக்குத் தெரியாமலே செய்தேன். இவருக்குச் சந்தேகம் தோன்றியிருந்தது. அன்றிரவு இவர் தூங்கிவிட்டதாக எண்ணிக்கொண்டு பத்து மணிக்கு மாசிக்கோனார் வீதிக்கு நான் புறப்பட்டேன். இவர் உண்மையில் தூங்கவில்லை. எனக்குத் தெரியாமல் என்னைத் தொடர்ந்து பின்னால் வந்தார். முதலில் நான் ஏதோ தப்புத் தண்டாக் காரியம் செய்வதாக எண்ணி என்னைக் கொன்றுவிட நினைத்தார். அப்புறம் என்னதான் நடக்கிறது என்று கடைசி வரையில் பார்க்க விரும்பி அந்த வீட்டுக்கு வந்து இருட்டறையில் ஒளிந்து கொண்டிருந்தார். நாம் இருவரும் பேசிக் கொண்ட விஷயங்கள் இவர் காதில் நன்றாய் விழவில்லை. ஆனால், என் கண்களில் கண்ணீரைப் பார்த்துவிட்டு, தாங்கள் ஏதோ என்னை நிர்ப்பந்தப்படுத்துகிறீர்கள் என்று எண்ணிவிட்டார். கீழிருந்து இன்ஸ்பெக்டர் மாடியில் ஏறி வரும் சத்தம் கேட்டதும், இனிமேல் காத்திருக்கக் கூடாதென்று தங்களைப் பின்னாலிருந்து ஓங்கி அடித்துவிட்டார். இவரை எப்படியாவது இன்ஸ்பெக்டர் கண்ணில் படாமல் தப்புவிப்பதற்காகத்தான் அன்றிரவு நான் இவரை அழைத்துக் கொண்டு அவசரமாய்ப் போய்விட்டேன். இல்லாவிடில் தங்களை அந்த நிலையில் விட்டுவிட்டு ஒரு நாளும் போயிருக்க மாட்டேன். ஆனால் இந்தப் பொல்லாத இன்ஸ்பெக்டர் எல்லா விஷயங்களையும் எப்படியோ தெரிந்து கொண்டு விட்டார்!" என்று வனஜா சொல்லி வருகையில், சிவராஜ் குறுக்கிட்டு, "இவ்வளவு சாமர்த்தியத்தையும் இந்தப் பொல்லாத இன்ஸ்பெக்டர் கறுப்பு மார்க்கெட் வியாபாரத்தைக் கண்டு பிடிப்பதில் காட்டினால் எவ்வளவோ நன்றாயிருக்கும்!" என்றான்.

தனராஜுக்கு அப்போது உண்மையாகவே கோபம் வந்துவிட்டது. இத்தனை

சோரும் பொறுமையுடன் பரிகாசமாகவே பேசி வந்தவர், சிவராஜின் வார்த்தைகளைக் கேட்டதும் கொதித்து எழுந்து, "எனக்கு என்ன சாமர்த்தியம் இருந்து என்ன செய்வது? உன்னைப் போல் பெண்ணின் கண்ணீரைக் கண்டதும் மூளையைப் பறிகொடுக்கும் முட்டாளைக் கூட்டுச் சேர்த்துக்கொண்டு நம்பியதனாலேதான் அன்று மோசம் போகும்படி ஆயிற்று! ஆனால் மறுபடியும் நான் ஏமாறப் போவதில்லை! இவர்கள் மூன்று பேரையும் இப்போதே கைது செய்யப் போகிறேன். கண்டிராக்டர் துரைராஜனின் தூண்டுதலின் பேரில் உன்னைப் பொய் சொல்லித் தனி வீட்டுக்கு அழைத்துச் சென்று கொலை செய்ய யத்தனித்ததாக இவர்கள் மீது குற்றம் சாட்டிக் கேஸ் நடத்தப் போகிறேன்!" என்று கர்ஜித்தார்.

வனஜா அவர் முன்னால் சென்று காலில் விழுந்து, "ஐயா! என்னைக் கைது செய்யுங்கள்; கேஸ் போடுங்கள். இன்னும் என்ன வேணுமானாலும் செய்யுங்கள். என் தகப்பனாரையும் தங்கையையும் கருணை கூர்ந்து விட்டு விடுங்கள். என்னுடைய முட்டாள் தனத்துக்காக அவர்களைத் தண்டிக்க வேண்டாம்! பெரிய மனது செய்யுங்கள்!" என்று கல்லும் கரையும்படிக் கதறினாள். கண்ணீரைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை; ஒரே பிரவாகந்தான்!

சிவராஜன் வெகு கம்பீரமான குரலில், "வனஜா! எழுந்திரு! அந்த மனிதரிடம் நீ ஒன்றும் கேட்க வேண்டாம்! அவரால் உங்களை ஒன்றும் செய்ய முடியாது! நான் சாட்சி சொன்னால் தானே அவர் கேஸ் போடுவதற்கு? 'அவர் சொல்லுவதெல்லாம் கட்டுக் கதை, நீங்கள் நிரபராதிகள், என்னை மண்டையில் அடித்துக் காயப்படுத்தியவர் இந்த இன்ஸ்பெக்டர்தான்! தம் குற்றத்தை மறைப்பதற்காக இப்படி அபாண்டமாக உங்கள் மீது பழி சுமத்துகிறார்!' என்று நான் கோர்ட்டில் சாட்சி சொல்லுகிறேன். இவர் உங்கள்பேரில் கேஸ் போட்டுப் புரட்டுவதைப் பார்த்து விடுகிறேன்!" என்றான்.

"அட பாவி! சண்டாளா!" என்றார் இன்ஸ்பெக்டர். என்ன சொல்லி என்ன? சிவராஜனின் மனதை மாற்ற முடியவில்லை.

எனவே அக்கா, தங்கை, தகப்பனார் ஆகிய மூன்று குற்றவாளிகளையும் இன்ஸ்பெக்டர் விட்டுவிட வேண்டியதாயிற்று.

## மங்களம்

தேசத்தொண்டர் சிவராஜன், மேலே கூறிய கட்டத்தில் கதையை நிறுத்தி விட்டு, "இப்படிப்பட்ட உண்மையான சம்பவங்கள் எல்லாம் நடைபெறும்போது, சோலைமலை இளவரசியைப் போன்ற கற்பனைக் கதைகளை யெல்லாம் ஏன் எழுதுகிறீர்?" என்று என்னைக் கேட்டார்.



"தெரியாத்தனத்தான்! இனிமேல் எழுதவில்லை!" என்றேன்.

சண்டை பிடிக்கும் நோக்கம் கொண்டிருந்த சிவராஜன் என்னுடைய பதிலைக் கேட்டதும் மௌனமானார்.

மேலும் அவர் கதையைத் தொடர்வார் என்று சற்று நேரம் எதிர்பார்த்தேன். அவருடைய மௌனம் கலையாமலிருக்கவே, "அப்புறம் என்ன?" என்று கேட்டேன்.

"அப்புறம் என்ன? ஒன்றுமில்லை. கதை தான் முடிந்து விட்டதே!" என்றார் சிவராஜ்.

"முடிந்ததாக எனக்குத் தோன்றவில்லையே? கதையில் வரும் முக்கிய பாத்திரங்கள் ஒவ்வொருவரும் என்ன ஆனார்கள் என்று சொல்லியல்லவா கதையை முடிக்க வேண்டும்?" என்றேன்.

"ஓஹோ! நீர் பழைய கர்நாடகம் போலிருக்கிறது. இந்தக் காலத்துக் கதாசிரியர்கள் பலர், கதாபாத்திரங்களை அந்தரத்தில் தொங்க விட்டு விட்டல்லவா கதையை முடிக்கிறார்கள்? சென்ற வாரத்தில் ஒரு கதை படித்தேன். அதன் கதாநாயகன் மலைமேலே நிற்கிறான். நின்று கீழே நோக்குகிறான். அவன் பார்த்த இடத்தில் கதாநாயகி நிற்கிறாள். அவள் மேல் பாய்வதற்குத் தயாராகப் பக்கத்திலுள்ள புதரில் ஒரு சிறுத்தைப் புலி பதுங்கிக் கொண்டிருக்கிறது. அதைப் பார்த்த கதாநாயகன் தன் காதலியைப் பாதுகாப்பதற்காக விரைந்து இறங்குகிறான். இறங்கும்போது கால் தடுக்கி விழுந்து உருளுகிறான். காதலி தன் மடியிலிருந்த கயிற்றை எடுத்து அங்கிருந்த மரக்கிளையில் கட்டித் தூக்குப் போட்டுக் கொள்ளத் தயாராகிறாள். அவள் பேரில் பாய்வதற்குச் சிறுத்தைப்புலி தயாராகிறது. காதலன் உருண்டு உருண்டு உருண்டு வருகிறான்!......இந்த இடத்தில் கதை முடிந்து விடுகிறது. இம்மாதிரியான புது மாதிரி கதை முடிவில் உமக்கு நம்பிக்கை இல்லை போலிருக்கிறது!" என்றார் சிவராஜ்.

"ஆமாம்; எனக்கு நம்பிக்கை இல்லை தான். கதாபாத்திரங்கள் ஒவ்வொருவரும் என்ன கதி அடைந்தார்கள் என்று தெரிந்து கொண்டால்தான் எனக்குத் திருப்தி. சொல்லுங்கள்!" என்றேன்.



"அப்படியானால் சரி!" என்று சொல்லி விட்டுச் சிவராஜன் மேலே கூறினார்:—

"இன்ஸ்பெக்டர் தனராஜன் வேறு ஜில்லாவுக்கு மாற்றப்பட்டார். முக்கியமான ஒரு பிளாக் மார்க்கெட் கேஸைக் கண்டு பிடிக்கத் தவறியதற்காக அவருக்கு ஒரு 'பிளாக் மார்க்' கிடைத்தது!

கண்டிராக்டர் துரைராஜ் ஜில்லா உணவுக் கமிட்டியின் தலைவராக நியமிக்கப்பட்டார். பொது நன்மைக்காக அவர் செய்த அரிய சேவைகளை மாகாண மந்திரிகள் பெரிதும் பாராட்டினார்கள்.

வனஜா முதல் நாள் சிவராஜனைச் சந்தித்தபோது ஒரு காரமாக [illegible] இலாத ஒரு பெரிய மனிதர் மீது புகார் கூறினாள்

அல்லவா? அந்தப் பிரமுகர், கண்டிராக்டர் துரைராஜுடன் வியாபாரத் துறையில் போட்டி யிட்டு வந்தவர். அவர் பேரில் கள்ள மார்க்கெட் கேஸ் தொடரப்பட்டு அவருக்கு இருபத்தையாயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப் பட்டது!

வனஜாவின் பேரில் புகார் சொல்லி மொட்டைக் கடிதங்கள் கல்வி அதிகாரிகளுக்குக் கிடைத்தன. அதன்பேரில் அவள் வேலையிலிருந்து நீக்கப்பட்டாள்.

உள்ளூர்க் காங்கிரஸ் கமிட்டியில் தேசத் தொண்டர் சிவராஜன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறியது.

வாழ்க்கையின் பேரபாயங்களிலிருந்து வனஜாவைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொள்வது தன் கடமை என்று சிவராஜன் தீர்மானித்தான்.

அபலைகள் என்று சொல்லிக் கொண்டு வரும் மோசக்காரப் பெண்களின் கண்ணீரினால் சிவராஜ் ஏமாறக் கூடியவனா யிருப்பதை முன்னிட்டு, அவனைப் பாதுகாப்பது தன்னுடைய கடமை என்று வனஜா முடிவு செய்தாள்.

சிவராஜனுக்கும் வனஜாவுக்கும் முருகனுடைய திருச்சந்நிதியில் திருமணம் நடந்தேறியது.

இருவரும் அந்த ஜில்லாவை விட்டுச் சென்னைப் பட்டணத்துக்கு வந்தார்கள்.

அவர்களுடன் வனஜாவின் தங்கையும் தகப்பனாரும் வந்து சேர்ந்தார்கள்!"

* * *

சிவராஜன் சொல்லி முடித்ததும், "ஆகக்கூடி, கதை மங்களகரமாகக் கலியாணத்தில்தானே முடிந்தது? ரொம்ப சந்தோஷம்!" என்றேன்.

"சந்தோஷமானது மண்ணாங்கட்டியாவது? வனஜாவைக் கலியாணம் செய்து கொண்டு நான் படும் பாடு அந்தப் பழனி ஆண்டவனுக்குத்தான் தெரியும். நான் இப்படிப்பட்ட கதிக்கு வருவேன் என்று கனவிலும் கருதவில்லை!" என்றார் சிவராஜ்.

"அப்படி என்றால் என்ன? எந்த கதியை அடைந்து விட்டீர்கள்?" என்று கேட்டேன்.

"வீட்டில் காலைக்குக் காலை காப்பிக்குப் போடச் சர்க்கரை இல்லை! வனஜாவும் அப்பனும் வெல்லம் போட்ட காப்பி சாப்பிட மாட்டார்கள். சீனிச் சர்க்கரைக் காப்பிதான் சாப்பிடுவார்கள். அரை வீசைச் சீனி இல்லாமல் இன்றைக்கு நான் வீட்டுக்குப் போக முடியாது. கள்ள மார்க்கெட்டிலாவது வாங்கியாக வேண்டும்! சீனி எங்கே கிடைக்கும், உங்களுக்குத் தெரியுமா?" என்று சிவராஜன் கேட்டார்.

"எனக்கு அவ்வளவு பழக்கமில்லை" என்று சொல்லி, நம்முடைய வீட்டிலே சண்டை பிடித்துக் கைவசம் இருந்த சீனியைச் சேர்த்து அவரிடம் கொடுத்தேன். அதை வாங்கிக் கொண்டு சிவராஜன் மனமார்ந்த வந்தனம் சொல்லி விட்டுப் போய்ச் சேர்ந்தார்.

கதை ஒரு மாதிரி சப் என்று முடிந்து விட்டதே என்று நேயர்கள் முணுமுணுப்பது என் காதில் விழுகிறது.

சப்பென்று இருந்தாலும் பாதகமில்லை, சுவாமி! நான் இப்போது சாப்பிடும் காப்பி கசப்பா யிருக்கிறதே?




சிங்காரன் கோவில் பொதுக் கூட்டத்தில் சபா நாயகருக்குப் பிறகு கல்கி ஆசிரியர் பேசினார். நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி பூசிக் குங்குமத் திலகமிட்டுப் பழுத்த சிவாச்சாரியார் போல் கல்கி தோற்ற மளித்தார். அதன் காரணம் அவருடைய பேச்சில் வெளியாயிற்று. கல்கி அவர்களுக்கு முன்னே யெல்லாம் கோவிலுக்குப் போனால் பக்தி உண்டாவதில்லையாம். அதற்குப் பதிலாகக் கோவில்களிலுள்ள பழைய சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்த்து விட்டுத் திரும்பி வந்து விடுவாராம். சத் சங்கத்துடன் சேர்ந்தால் பக்தி உண்டாகும் என்று பெரியோர் சொல்லியிருப்பதின் உண்மையை அன்று தாம் உணர்ந்ததாகக் கல்கி கூறினார். மகா பக்திமானான ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை அவர்களுடன் சேர்ந்து சுவாமி தரிசனம் செய்ய வந்ததனால் தம்மை அறியாமலே அன்று அவருக்குப் பக்தி உண்டாயிற்றாம்.

சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் அவர்கள் சட்டசபை வேலை செய்யும் நேரம் போக பாக்கி நேரத்தில் ஹரிஜனச் சேரிகளுக்குச் சென்று ஏழைப் பிள்ளைகளின் வயிற்றுக்குப் பால் வார்க்கும் காரியம் செய்து கொண்டு வருகிறாராம். இந்தக் காரியத்திற்காக ராஜாஜி வெளிநாட்டிலிருந்து சில அபிமானிகள் அனுப்பிய ஆயிரம் பால் டின்களைச் சபாநாயகரிடம் கொடுத்திருக்கிறாராம். தாம்பரத்துக்குப் பக்கத்துக் கிராமத்தில் சபாநாயகர் பால் வார்க்கச் சென்ற போது கல்கியும் அங்கு சென்றிருந்தாராம். அப்பொழுது சபாநாயகர் கூட்டத்திலிருந்த ஒருவரைப் பார்த்து, "ஏனப்பா, நீ ஒரு ஹிந்துதானே? ஏன் பாழும் நெற்றியுடன் இருக்கிறாய்? நெற்றியில் ஒன்றும் இட்டுக் கொள்ளக் கூடாதா?" என்று கேட்டாராம். உடனே கல்கிக்குத் தமது நெற்றியை எங்கே சபாநாயகர் பார்த்து விடப் போகிறாரோ என்ற பயம் ஏற்பட்டு விட்டதாம். உடனே சபாநாயகர் தம்மைப் பார்க்க முடியாதபடி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாராம்.

பலர் விபூதியைப் பட்டை பட்டையாய்ப் பூசிக் கொண்டு பல அயோக்கியத்தனங்களைச் செய்து கொண்டிருப்பதாலும், பலர் தங்கள் நெற்றியில் நாமம் போட்டுக் கொள்வதுடன், நாமக்கட்டிக்குக் கண்ட்ரோல் ஒன்றும் இல்லாததினால் மற்றவர்களுக்கும் நாமத்தைக் குழைத்துச் சாத்தி விடுவதாலும், கல்கிக்கு நெற்றிக்கு இட்டுக் கொள்வதில் அதுவரை பிரியம் இல்லாமலிருந்ததாம். ஆனால் நல்ல உத்தமர்களும் நெற்றிக்கு இட்டுக் கொள்கிறார்கள் என்று சபாநாயகரைப் பார்த்த பிறகு தெரிந்து போய் விட்டதாம். ஆகையால் தாமும் நெற்றிக்கு இட்டுக் கொள்ளலாம் என்ற தைரியம் ஏற்பட்டு விட்டதாம். அதனால் தான் சங்கரன் கோவில் விபூதி ஸ்டாக்குக்கே ஆபத்து வரும்படியாக அவ்வளவு விபூதியைப் பூசிக்கொண்டாராம். அதற்குத் தமது நெற்றியே சாட்சி என்று கல்கி சுட்டிக் காட்டியபோது சபையில் பலத்த சிரிப்பு ஏற்பட்டது.

அன்று மத்தியானச் சாப்பாடு ஆன உடனே, "கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று ஸ்ரீ சோமயாஜுலு சபாநாயகரிடம் சொன்னார். அதற்குச் சபாநாயகர், "ஓய்வெடுத்துக் கொள்வது அப்புறமிருக்கட்டும்; நான் ஏதாவது ஒரு சேரியைப் போய்ப் பார்க்க வேண்டும்! புறப்படலாமா?" என்றார்.

"ஓகோ! இந்தச் சபாநாயகர் பொல்லாதவர்போலிருக்கிறது! இவருக்குக் காரியத்தான் குறி!" என்று நினைத்துக்கொண்டேன். ஆனால் ஸ்ரீ சோமயாஜுலு அவரை விட ரொம்பப் பொல்லாத பேர்வழி என்பது தெரிந்தது. "பிரயாணத்தின் போது போகிற பாதையிலுள்ள சேரிகளைப் பார்வையிட ஏற்பாடு செய்திருக்கிறேன். ஆகை

யால் இப்போது நிம்மதியாய்ப் படுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி விட்டார். சபாநாயகரும் திருப்தி அடைந்தவராய்ப் படுக்கப் போனார்.

ஆனால் படுக்கச் சென்றவர்களை ரொம்ப நேரம் படுத்திருக்கும்படி திருநெல்வேலித் தொண்டர்கள் விட்டு விடவில்லை. படுத்துக் கண்ணை மூடித் திறப்பதற்குள்ளே, "புறப்படலாமா!" "போகலாமா!" "ஓய்வு போதுமல்லவா?" "சிரமபரிகாரம் ஆகிவிட்டதா?" என்ற கூக்குரல்கள் எழுந்தன. "சந்தை இரைச்சலில் குடியிருந்து கெட்டேனே!" என்று சொல்லிக் கொண்டே எழுந்தோம். சங்கரன் கோவிலுக்கு எழு மைல் தூரத்திலுள்ள கரிவலம் வந்த நல்லூர் என்ற கிராமத்திற்குப் புறப்பட்டோம்.

## கரிவலம் வந்த நல்லூர்

ஒரு சிறு கிராமத்தில் அத்தனை பெரிய அழகான கோவில் இருப்பது கண்டு அதிசயித்தோம். நமது தமிழ்நாட்டு முன்னோர்களின் பக்தி மயமான வாழ்க்கையை நினைத்து வியந்தோம். அந்த நாளில் தமிழ் மக்கள் உழுது பயிரிடுவதும் ஒழிந்த நேரமெல்லாம் கோவில் கட்டுவதுமாக வாழ்க்கை நடத்தி யிருப்பார்கள் போலும்! இல்லாவிட்டால் இப்படிச் சின்னச் சின்ன கிராமங்களிலேகூட இவ்வளவு பிரம்மாண்டமான ஆலயங்களை நிர்மாணித்திருக்க முடியுமா?

சபாநாயகருக்கும் கல்கிக்கும் வழக்கமான கோவில் மரியாதைகள் நடைபெற்றன. சுவாமி தரிசனம் செய்துவிட்டுக் கோவிலை வலம் வந்தோம். கரிவலம் வந்த நல்லூர், சபாநாயகர் வலம் வந்த நல்லூராகவும் ஆயிற்று! பிறகு, ஆலயத்துக்கு எதிரே நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் சபாநாயகர் பேசியதாவது :—"பழைய காலத்தில் நமது நாட்டிலிருந்த ராஜாக்கள் இந்த மாதிரி அற்புதமான கோவில்களைச் சின்னச் சின்ன ஊர்களிலே கூடக் கட்டினார்கள். அந்த ராஜாக்கள் எல்லாம் இப்போது எங்கே? தங்கள் ராஜ்யங்களை இங்கிலீஷ்காரர்களிடம் பறிகொடுத்து விட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். ஒரு சில ஆங்கிலேயர் எப்படி இந்தப் பெரிய தேசத்தை ஜயித்தார்கள்? கிழக்கிந்தியக் கம்பெனியின் பழைய ரிகார்டுகளையெல்லாம் நான் சென்னை மேயராக இருந்த காலத்தில் படிக்கும்படி நேர்ந்தது. இங்கிலீஷ்காரர்கள் ஆதித்திராவிடர்களைத் தங்கள் சைன்யத்தில் சேர்த்துக்கொண்டுதான் இந்த மாகாணத்தை ஜயித்தார்கள் என்று அந்தப் பழைய ரிகார்டுகளிலிருந்து நிச்சயமாய்த் தெரிய வருகிறது. இதிலிருந்து நாம் ஒரு பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். நமது தலைவர்கள் எவ்வளவோ தியாகம் செய்து போராடியதன் பலனாக நமக்குச் சீக்கிரத்திலேயே சுயராஜ்யம் வரப்போகிறது. அதை மறுபடியும் பறி கொடுத்து விடக்கூடாது. பறி கொடுக்காமல் இருப்பதற்கு ஹிந்து சமூகத்திலுள்ள வேற்றுமைகள் போக வேண்டும். ஆதித் திராவிடர்கள் ஹிந்து சமூகத்தோடு ஒன்றாகி விடவேண்டும்."

## அழகுநேரி

கரிவலம் வந்த நல்லூரிலிருந்து கோவில்பட்டிக்குப் புறப்பட்டோம். வழியில் அழகுநேரி என்னும் அழகான ஹரிஜன கிராமத்துக்கு வந்து சேர்ந்தோம். இந்த கிராமத்திலுள்ளவர்கள் எல்லோரும் ஹரிஜனங்கள்

சங்கரன் கோவில் ரயிலடியில் சபாநாயகருக்கும் கல்கிக்கும் மாலை போட்டு வரவேற்றார்கள்.





கரிவலம் வந்த நல்லூர், சபாநாயகர் வலம் வந்த நல்ல ஊராகவும் ஆயிற்று !

என்று தெரிந்தது. தங்கள் சமூகத்தைச் சேர்ந்த சட்டசபைத் தலைவரை வரவேற்க அழகுனேரி வாசிகள் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தார்கள்.

அழகுனேரி சமரச சன்மார்க்க சங்கத்தார் எங்கள் எல்லாருக்கும் நல்ல இளநீர் கொடுத்தார்கள். சபாநாயகருக்கு உபசாரப் பத்திரமும் வாசித்துக் கொடுத்தார்கள். உபசாரப் பத்திரத்தை ஒரு ஹரிஜன இளைஞர் வாசித்தார். அதை எழுதியதும் அந்த இளைஞர்தான் என்று தெரிய வந்தது. கணீர் கணீர் என்ற குரலோசையுடன் சுத்தமாகவும் அழுத்தமாகவும் தமிழை நன்கு உச்சரித்து வாசித்தார். கொஞ்சம் கேளுங்கள் :—

“மறைகள் நம்மைக் குறைத்துரைத்தன; மக்கள் நம்மைக் குத்தலாகப் பேசினர். நாமோ பித்தராய் வாளா விருந்தோம். காலம் வந்தது; கலை பயின்றோம். இதற்கு இன்று தலையாய் விளங்கும் தாங்களே சான்று. தலைவா, முதல்வா, எங்கள் நாயகா, உமது வருகையால் இந்தச் சேரி புனிதமடையக் கிருபை புரிவீர் !”—இந்த அழகிய தமிழ்ச் சொற்கள் கேட்டவர் காதில் ரீங்காரம் செய்தன. சபாநாயகர் அந்தப் பத்திரத்தை மிகவும் பாராட்டி ஹரிஜனங்கள் எல்லோரும் இம்மாதிரி நல்ல தமிழ் படிக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இப்பொழுது ஹரிஜன சமூகம் முன்னுக்கு வந்து கொண்டிருப்பதையும் பலர் பெரிய உத்தியோகங்கள் வகிப்பதையும் குறிப்பிட்டார். மேலும் அவர் கூறியதாவது :—

“தீண்டாமை அடியோடு தீர்ந்து போய்விட்டதென்று நான் சொல்லவேயில்லை. இன்னும் எத்தனையோ கொடுமைகளுக்கு நம்மவர்கள் ஆளாகிவருகிறார்கள். ஆனால், உங்களை ஒன்று கேட்டுக் கொள்கிறேன். இருபது வருஷத்துக்கு முன்பிருந்த நிலைமையையும் இப்போது உள்ள நிலைமையையும் ஒத்திட்டுப் பாருங்கள். எவ்வளவோ நாம் முன்னேறித்தான் இருக்கிறோம். இதெல்லாம் மகாத்மாவினாலும் காங்கிரஸினாலும்தான் ஏற்பட்டது. இதை நாம் மறந்தால் நன்றி கொன்றவர்களாவோம் !”

மேலே போகையில் வழியிலிருந்த ஆலங்குளம் கிராமத்தில் ஹரிஜனங்கள் கூடித் தங்கள் குறைகளைச் சபாநாயகரிடம் எடுத்துச் சொன்னார்கள். சபாநாயகர் அவற்றைப் பரிவுடன் கேட்டார். குறைகளை நீக்கத் தம்மாலானவற்றைச் செய்வதாக வாக்களித்தார்.

சபாநாயகர் தமது பிரசங்கங்களில் ஒரு நல்ல முறையை எங்கிலும் அனுசரித்து வந்ததைக் கவனித்தேன். சாதி ஹிந்துக்கள் அதிகமாகக் கூடியுள்ள கூட்டங்களில் தீண்டாமையை அடியோடு ஒழிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றி வற்புறுத்திப் பேசினார். ஹரிஜனங்கள் அதிகமாகச் சேர்ந்திருக்கும் கூட்டங்களிலோ, மகாத்மாவினாலும் காங்கிரஸினாலும் ஹரிஜனங்கள் அடைந்திருக்கும் நன்மைகளைப் பற்றியே பெரிதும் பேசினார். “இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் புத்தர் முயற்சி செய்தும், ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் இராமானுஜர் முயற்சி செய்தும் முடியாமற் போன காரியம் இன்று மகாத்மா காந்தியினால் நடந்திருக்கிறது !’ என்று தமது சமூகத்தினருக்கு அடிக்கடி நினைவூட்டினார். அதைக் கேட்ட ஹரிஜனங்களும் பலத்த கரகோஷம் செய்து அதை ஆமோதித்தார்கள்.

## கோவில்பட்டி

சுமார் எட்டரை மணிக்குக் கோவில்பட்டி போய்ச் சேர்ந்ததும் ஸ்ரீ செண்பக வல்லி அம்மன் கோவிலுக்கு முதலில் சென்றோம். இந்தக் கோவிலில் அம்மனுக்குத்

தான் சுவாமியைக் காட்டிலும் பிரதானம் கொடுக்கிறார்கள். இதை அறிந்துதான் நமது பெரியவர் ஒருவர், "அம்மையே அப்பா!" என்று அம்மையை முன்னால் வைத்துப் பாடினார் போலும். ஸ்ரீ செண்பக வல்லி அம்மன் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம் என்று சொன்னார்கள். தரிசனம் செய்து முடிந்ததும் கோவிலுக்கு வெளியில் காத்துக் கொண்டிருந்த பதினாயிரக் கணக்கான ஜனங்கள் அடங்கிய பொதுக் கூட்ட மேடைக்குச் சென்றோம். தலைவர்களை அப் பெருங்கூட்டம் ஆரவாரம் செய்து வரவேற்றது. திருநெல்வேலி ஜில்லாவின் புரட்சி வீரர் ஸ்ரீ மோகாதன் கூட்டத்திற்குத் தலைமை வகித்து எல்லோரையும் வரவேற்றார். "பங்குனி மாதம் ஒருவருக்கு ஜே!" "சித்திரை மாதம் மற்றொருவருக்கு ஜே!" என்று சொல்லும் சில தேசபக்தர்களின் பச்சோந்திக் கொள்கையைப் பலமாகக் கண்டித்தார். இன்னும் சில தேசத் துரோக அரசியல் வாதிகளைத் தெற்கு வடக்காகப் பிய்த்து வாங்கினார். அன்று முதல் இன்று வரையில் நாம் ராஜாஜியை ஆதரித்து வருவதின் காரணம் இப்போது எல்லாருக்கும் விளங்கிவிட்டதல்லவா என்று கேட்டார். சபையோரும் விளங்கி விட்டதென்பதைப் பலத்த கரகோஷத்தினால் தெரிவித்தார்கள்.

பிறகு, "ஹிந்து மதம் ஹரிஜனங்களுக்குத்தான் சொந்தம்; சாதி ஹிந்துக்களுக்குச் சொந்தமல்ல!" என்று ஸ்ரீ மோகாதன் கர்ஜித்துவிட்டு, என்னைப் பேசும்படி கட்டளையிட்டார்.

வழக்கம்போல் நாமக்கல் கவிஞரின் சங்கநாதப் பாட்டுடன் அடியேன் ஆரம்பித்தேன்:

" 'மகாத்மா காந்திக்கு, ஜே!' என்றுசொல்லுகிறோம்; 'ஜவாஹர்லாலுக்கு, ஜே!' என்று கோஷிக்கிறோம். இப்படி எல்லாருக்கும் 'ஜே!' என்று கடைசியில் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் நமது சபாநாயகருக்கோ இயற்கையிலேயே அவருடைய பெயருக்கு முன்னால் 'ஜே' ஒட்டிக் கொண்டிருக்கிறது. அவரது பெயரே ஜே. சிவசண்முகம் பிள்ளை! (கரகோஷம்.)

"சபாநாயகருடன் இன்று காலையிலிருந்து பிரயாணம் செய்து வந்ததில், அவரைப் பற்றிய ஓர் உண்மையை அறிந்து கொண்டேன். மகாகவி டாகூர் தமது கவி ஒன்றில் ஒரு ரஸமான விஷயம் சொல்லியிருக்கிறார். ஒரு பக்தன் கடவுளைப் பார்த்து, 'பகவானே! உலகத்தில் தினம் தினம் எத்தனையோ மனிதர்களைப் படைத்துக் கொண்டிருக்கிறாய்! ஆனால் மனிதர்களோ, போட்டியும் பொறாமையும் கொண்டு ஒருவரை ஒருவர் மாய்த்து வருகிறார்கள். அப்படி இருந்தும், மேலும் மேலும் ஏன் மனிதர்களைப் படைத்துக் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டானாம். அதற்குப் பகவான், 'பக்தா! உன் கேள்வி ரொம்பவும் நியாயமானதுதான். ஆனால் எப்போதாவது நல்ல மனிதன் ஒருவன் கிடைக்க மாட்டானா என்ற ஆசையினால்தான் மேலும் மேலும் மனிதர்களைப் படைத்துக் கொண்டிருக்கிறேன்!' என்றாராம். அப்படிக் கடவுள் தேடிக் கொண்டிருந்த நல்ல மனிதர் கடைசியாக இவ்வுலகில் தோன்றி விட்டார்! அவர் நமது சபாநாயகர் சிவ சண்முகம் பிள்ளை அவர்கள்தான்! (பலத்த கரகோஷம்) அப்படிப்பட்ட கடவுளுக்கு உகந்த நல்ல மனிதரை இத்தனை நாளும் கோவில்களுக்குள்ளே போகக் கூடாது என்று நாம் வைத்திருந்தோம். (பலமற்ற கரகோஷம்) அதை நினைத்தால் எனக்கு ரொம்பவும் அவமானமாயிருக்கிறது. (கரகோஷமே யில்லை!)"

இவ்வாறு பொதுக்கூட்டத்தின் உற்சாகத்தை அடியோடு விழச் செய்து, மறுபடியும் அதைத் தூக்கிவிடுவதற்காகப் பல அரசியல் விஷயங்களைப் பற்றிக் காரசாரமாகவும், வீராவேசமாகவும் நான் பேசி முடித்தேன்.

ஹரிஜனங்கள் நிறைந்த அழகுநேரி கிராமத்தில் ஒரு காட்சி.



பின்னர் சபாநாயகர் கரகோஷத்தினிடையே எழுந்து பேச ஆரம்பித்தார். ஆலயப் பிரவேசம் சம்பந்தமாகத் தமது அளவற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்தார். திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் தொண்டர்களின் அரிய ஊழியங்களைப் பாராட்டினார். பின்னர், தாம் வந்த வழியில் பல இடங்களில் ஹரிஜனங்கள் கூட்டம் கூடி நின்று தங்கள் குறைகளைத் தெரிவித்துக் கொண்டதைக் குறிப்பிட்டார்.

“என்னிடம் குறைகளைத் தெரிவித்துக் கொண்டவர்கள் என்னையும் மந்திரியைப் போல் அரசாங்க அதிகாரம் உள்ளவன் என்று எண்ணித் தெரிவித்தார்கள். ஆனால் நான் மந்திரி இல்லை. என்னிடம் சொல்லப்பட்ட குறைகளையெல்லாம் நான் சம்பந்தப்பட்ட மந்திரிகளிடம் அவசியம் சொல்லுவேன். அவ்வளவுதான் என்னால் முடியும். குறைகளைக் கேட்டுக் கொண்டிருந்த போதெல்லாம் ராஜாஜி பிரதம மந்திரியாக இருந்தபோது செய்த பல காரியங்கள் என்னுடைய ஞாபகத்திற்கு வந்து கொண்டிருந்தன. நபர்களைக் காணாத இடத்தில்தான் புகழ வேண்டும். ராஜாஜி இப்போது நம்மை விட்டு வெகு தூரத்திற்குப் போய் விட்டார். ஆனால் அவர் இந்த மாகாண ஹரிஜனங்களுக்குச் செய்திருக்கும் நன்மையை அளவிட முடியாது!” என்று கூறிவிட்டு, ஸ்ரீ சிவசண்முகம், ராஜாஜி ஹரிஜனங்களுக்குச் செய்த நன்மைகளுக்குப் பல உதாரணங்கள் கூறினார். அவை யெல்லாம் எனக்கும் “கல்கி” ஆசிரியருக்கும் கூட வியப்பை அளித்தன. ஏனெனில், இதற்கு முன் அவை எங்களுக்கே தெரியாமலிருந்தன. ஹரிஜனப் பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடச் சம்பளமும் காலேஜ் சம்பளமும் இல்லாமல் செய்தது; படிக்கும்போது சாப்பாட்டுக்குப் பணம் கொடுக்கச் செய்தது; சர்க்கார் உத்தியோகத்தில் சேருவதற்கு ஹரிஜனங்களுக்கு வயது நிபந்தனை யில்லாமல் செய்தது—இதுபோன்ற பல காரியங்களை எடுத்துச் சொன்னார். படித்த ஹரிஜன இளைஞர்களுக்கு உத்தியோகம் பண்ணி வைப்பதில் ராஜாஜி எடுத்துக் கொண்ட பெரு முயற்சிகளையும் குறிப்பிட்டார். அவர் கொடுத்த ஓர் உதாரணம் மிகவும் ரஸமாயிருந்தது.

வகுப்பு வாரியாக சர்க்கார் உத்தியோகங்களைக் கொடுக்க வேண்டுமென்ற விதி ஒன்று ஏற்பட்டிருக்கிறதல்லவா? இந்த விதியானது ஒவ்வொரு சாதியாகத் தாண்டி ஹரிஜனங்களிடம் வரும்போது பயனில்லாமல் போய் விடுவது வழக்கமாயிருந்ததாம். அதாவது, அந்த உத்தியோகத்துக்குத் தகுந்த ஹரிஜன அபேட்சகர் இல்லை என்று காரணம் சொல்லி விட்டு, மேல் சாதிக்காரர்களுக்குக் கொடுத்து விடுவார்களாம். ஒரு தடவை போலீஸ் டிபுடி சூபரின்டெண்டு வேலைக்கு ஹரிஜன வகுப்பின் உரிமை வந்ததாம். வழக்கம் போல் “ஹரிஜனர் ஒருவரும் இல்லை” என்று சொல்லி, ஒரு சாதி ஹிந்துவுக்கு வேலையைக் கொடுக்கச் சிபார்சு வந்ததாம். ராஜாஜி அதை ஒப்புக்கொள்ளாமல் ஸ்ரீ சிவசண்முகத்தையும் இன்னும் சில ஹரிஜனத் தலைவர்களையும் கூப்பிட்டனுப்பி, விஷயத்தைச் சொல்லித் தகுதியான ஆளைக் கூட்டி வரும்படி சொன்னாராம். அவ்விதமே ஹரிஜனத் தலைவர்கள் பி. ஏ. பாஸ் செய்த ஒரு ஹரிஜன இளைஞரைக் கொண்டு வந்தார்களாம். அவரைக் காரியாலயத்திற்கு வரச் சொல்லி, போலீஸ் இலாகாத் தலைவரையும் வரச்சொல்லி, அங்கேயே பரீட்சை செய்யும்படி சொன்னாராம். ஸ்ரீ சிவசண்முகத்தையும் தம் அருகில் இருக்கச் செய்திருந்தாராம். பரீட்சை முடிந்தவுடன் மேற்படி அதிகாரி, “மற்றத் தகுதி யெல்லாம் இருக்கிறது; ஆனால் ஆள் ரொம்பவும் மெலிவாக இருக்கிறார். போலீஸ் உத்தியோகத்திற்கு ஆள் ஆஜானுபாகுவாக இருக்க வேண்டும்” என்றாராம். அதற்கு ராஜாஜி, “இவர் ஏழை ஹரிஜன இளைஞர். இதுவரை சரியான சாப்பாடே இவருக்குக் கிடைத்திராது; ஆகையால் இப்படி மெலிந்திருக்கிறார். உத்தியோகத்தைக் கொடுத்தால், சந்தோஷத்தினாலேயே சீக்கிரம் பருத்து விடுவார்!” என்று கூறியதும், இன்ஸ்பெக்டர் ஜெனரல் “சரி” என்று சொல்லி, அந்த ஹரிஜன இளைஞருக்கு வேலையைக் கொடுத்தாராம்.

“ராஜாஜி சொன்னது போலவேதான் நடந்தது. மேற்படி இளைஞர் உத்தியோகம் ஏற்றுக்கொண்ட ஆறு மாதத்துக்குள் கட்டிப் பிடிக்கமுடியாதபடி பருத்துப் போய் விட்டார். திறமையாக உத்தியோகமும் பார்க்கிறார்!” என்று சபாநாயகர் சொன்னபோது, சபையில் ஏற்பட்ட சிரிப்பையும் குதூகலத்தையும் கட்டிப் பிடிக்கமுடியாமல் போயிற்று.

சபாநாயகருக்குப் பின்னர் கல்கி ஆசிரியர் பேச எழுந்தார். இரவு மணி பத்துக்கு

மேல் ஆனபோதிலும் ஜனங்கள் அமைதியுடனும் ஆர்வத்துடனும் கல்கியின் பேச்சைக் கேட்கக் காத்திருந்தார்கள்.

கல்கி பேசலானார்:—"இந்தப் பெரிய கூட்டத்தின் ஆரம்பத்தில் வீரர் மேகநாதனின் மேகநாதம் கேட்டது; பின்னர் நமது சின்ன அண்ணாமலையின் சங்கநாதம் கேட்டது. இரு நாதங்களும் இக் கூட்டத்தையே உலுக்கி விட்டன. ஸ்ரீ சின்ன அண்ணாமலை சபாநாயகரைப் பற்றிப் பேசும் போது ஒரு விஷயம் சொன்னார். எப்போதாவது ஒரு நல்ல மனிதர் அகப்பட மாட்டாரா என்ற ஆசையினால் கடவுள் இத்தனை நாளும் மனிதர்களைப் படைத்துக் கொண்டிருந்தார் என்றும், கடைசியாக நல்ல மனிதராகிய ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை அகப்பட்டு விட்டார் என்றும் கூறினார். இதைக் கேட்டதும் எனக்கு ஒரு பெரும் பயம் உண்டாகியிருக்கிறது. நல்ல மனிதர் அகப்பட்டு விட்டபடியால் மனிதர்களைப் படைக்கும் காரியத்தைக் கடவுள் ஒருவேளை நிறுத்தி விடுவாரோ என்று பயப்படுகிறேன். (சிரிப்பு) அதிலும் நமது ஹிந்து மதக் கடவுள் மட்டும் மனிதர்களைப் படைப்பதை நிறுத்தி விட்டு, மற்ற மதங்களின் கடவுள்கள் மனிதர்களைப் படைத்துக் கொண்டே இருந்தால் நம்முடைய கதி என்ன ஆவது? (பெரும் சிரிப்பு) இப்பொழுது ஹிந்துக்கள் முப்பது கோடியும் மற்ற மதஸ்தர்கள் பத்துக் கோடியும் இந்தியாவில் இருக்கிறார்கள். இப்படியிருக்கும்போதே ஹிந்துக்களின் பாடு பெரிய பாடாயிருக்கிறது. இதற்குக் காரணம் மற்ற மதத்தினரெல்லோரும் 'வா! வா!' என்று சொல்லி அழைத்துக் கொண்டிருக்கும் போது, ஹிந்துக்களாகிய நாம் மட்டும் 'போ! போ!' என்று தள்ளிக் கொண்டிருப்பது தான். நல்ல மரத்தில் புல்லுருவி பாய்வது போல் நமது புராதனமான, அற்புதமான ஹிந்து மதத்திலும் சாதி வேற்றுமை, தீண்டாமை முதலிய மூட்டாள்தனங்கள் புகுந்து கொண்டன. இந்த மூட்டாள்தனங்களை நாம் உடனே ஒழிக்கா விட்டால் ஹிந்து மதம், ஹிந்து சமூகம் எல்லாமே ஒழிந்து போகுமென்பது நிச்சயம்."



சங்கரராம ஈஸ்வரர் கோவிலில் தமிழிலேயே மந்திரம் சொல்லி அர்ச்சனை செய்வதைப் பார்த்து ஆனந்தப்பட்டு நிற்கிறார்கள்.

இவ்வாறு பேசிக் கூட்டத்தைக் கதிகலங்க அடித்து விட்டுக் கல்கி ஆசிரியர் வட இந்தியாவில் பம்பாய் போன்ற இடங்களில் வகுப்புக் கலவரங்களினால் ஏற்பட்டிருக்கும் 'கிலி'யைப் பற்றிப் பேசினார். பம்பாயில் ஏற்பட்ட தமது அனுபவங்கள் சிலவற்றையும் எடுத்துக் கூறினார்.

பிறகு, கோவில்பட்டி வாசிகளை ரொம்பப் புத்திசாலிகள் என்று வெகுவாகப் பாராட்டினார். அவர்களுடைய ஊர்ப்பெயரிலேயே 'கோவில்' என்ற வார்த்தையை வைத்துக் கொண்டார்களாம்!

"அது மட்டுமல்ல; உங்களுடைய ஊர்க் கோவிலைத் திறந்துவிட வேண்டிய அவசியமே இல்லாதபடி உங்கள் கோவிலுக்கு வாசற் கதவே போடாமல் வைத்து விட்டீர்கள்!" என்று கல்கி சொன்னபோது, எல்லோரும் கோவிலைப் பார்த்தோம். அவர் சொன்னதுபோல் கோவில் முன் வாசலில் கதவையே காணோம்!

கோவில்பட்டி வாசிகள் எல்லாக் காரியங்களையுமே புரட்சிகரமாகச் செய்கிறார்கள் என்று கல்கி ஆசிரியர் பாராட்டினார். "எல்லா ஊரிலும் கூட்டத்திற்குத் தலைமை வகிப்பவர் 'ஜம்' என்று நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, வெளியூரிலிருந்து வந்தவர்களைக் கீழே உட்காரச் சொல்வது வழக்கம்! ஆனால், இந்தக் கூட்டத்தில் தலைமை வகிக்கும் ஸ்ரீ மேகநாதன் கீழே உட்கார்ந்து கொண்டு, மேடையிலுள்ள மூன்று நாற்காலிகளிலும் எங்களை உட்கார வைத்தார். இப்போது நான் பேசிக் கொண்டிருக்கிறேனே என்று தலைவர் மேகநாதன் நான் உட்கார்ந்திருந்த

நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார்! அவர் ஏன் நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாரோ என்பதற்காக நான் பேசிக் கொண்டிருக்கிறேன்! ஆனால் எட்டயபுரத்திலிருந்து எங்களைக் கூட்டிக்கொண்டு போக வந்திருக்கும் மேயர் கந்தசாமி செட்டியாரோ, எட்டயபுரம் இன்று எட்டாதபுரமாகப் போய்விடுமோ என்று அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறார்!" என்று கவி கூறிய முடிவுரையின் போது, சபையோர் வானம் இடிந்து விழும்படி குதூகலமாய்ச் சிரித்தார்கள். இதற்குள் ஸ்ரீ மேகநாதனும் நாற்காலியிலிருந்து எழுந்து விடவே, இரவு பதினொரு மணிக்குக் கூட்டமும் கோலாகலமாக முடிவடைந்தது.

## எட்டயபுரம்

நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு எட்டயபுரம் போய்ச் சேர்ந்தோம். "சரி, பன்னிரண்டு மணியாகி விட்டது, இனிமேல் எட்டயபுரத்தில் கூட்டம் எங்கே நடக்கப் போகிறது? போனதும் நிம்மதியாகப் படுத்துத் தூங்கலாம்!" என்று பேசிக்கொண்டு போனோம். ஆனால் எட்டயபுரத்தில் அந்த அகாலமான நள்ளிரவிலும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடி ஆரவாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

எட்டயபுரம் ராஜா சட்டமெல்லாம் வருவதற்கு எவ்வளவோ காலத்திற்கு முன்னால் ராஜாஜியை வரவழைத்து ஹரிஜனங்களுக்குத் தமது சொந்தக் கோவிலைத் திறந்து விட்டவர். அந்தக் கோவிலைச் சபாநாயகர் தரிசனம் செய்தவுடன் மகாராஜா ஓர் அருமையான விருந்தளித்தார். இரவு சுமார் ஒரு மணிக்குப் பொதுக் கூட்டம் ஆரம்பமாகி இரண்டு மணிக்கு முடிவடைந்தது!

பின்னர் தூக்கமும் அசதியும் எங்களை ஒரே அமுக்காக அமுக்கின! ஆனாலும் காலை ஐந்து மணிக்கே ஸ்ரீ சோமயாஜுலுவும் ஸ்ரீ மேகநாதனும் எங்களை எழுப்பி விட்டார்கள். காரியத்தில் அவர்கள் அவ்வளவு குறியாக இருந்தார்கள். காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டு மகாகவி பாரதியாரின் மண்டபத்தைப் பார்க்கப் புறப்பட்டோம். சபாநாயகர் மண்டபத்தைப் பார்த்துவிட்டு மன மகிழ்ந்தார். மண்டபத்தின் கம்பீரத்தையும் அழகிய அமைப்பையும் பார்த்த மாத்திரத்திலே தமக்கு இரண்டு நாட்களாக ஏற்பட்ட பிரயாண அலுப்புக்கூட நீங்கிவிட்டதாகக் கூறினார். பாரதி மண்டபம் தளம் பூசப்பட்டு, வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. எட்டயபுரம் மகாராஜா மட்டும் மனது வைத்தாரானால், வேலை பூராவுமே முடிவதற்கு எவ்வளவு நேரம் ஆகிவிடும்? ஒரு மாதத்திற்கு மேல் நிச்சயம் ஆகாது.

எட்டயபுரத்திலிருந்து தூத்துக்குடிக்குப் பிரயாணமானோம். வழியில் குறுக்குச் சாலை என்ற ஊரில் பலர் குறுக்கே நின்று கொண்டு வரவேற்பளித்தார்கள். இப்படி வழி நெடுகச் சபாநாயகருக்குக் கிடைத்த வரவேற்புகளைப் பெற்றுக்கொண்டு தூத்துக்குடி போய்ச் சேர்ந்தோம்.

## தூத்துக்குடி

நகருக்கு வெளிப்புறத்திலே பெரிய திருவடி ஸ்ரீ துரைசாமி நாடார் அவர்களும் விட்டலபுரம் நண்பர் ஸ்ரீ வெங்கடாச்சாரியார் சுவாமிகளும் வரவேற்க வந்து விட்டார்கள். அவர்களுடனே தூத்துக்குடியிலுள்ள சங்கரராம ஈஸ்வரர் — பாகம்பிரியாள் அம்மை கோவிலுக்குச் சென்றோம். இங்கே கோவிலுக்குள் செல்ல வேண்டுமானால் மேல் சட்டையைக் கழற்றி விட வேண்டுமாம். சபாநாயகர் ஹிந்து சமூகத்தின் நன்மைக்காகத் தாம் எதற்கும் தயார் என்று சொல்வதுபோலச் சட்டையைக் கழற்றி விட்டு ஆலயத்துக்குள் பிரவேசம் செய்து விட்டார். நானும் சபாநாயகரைப் பின்பற்றினேன். இந்தக் கோவிலில் ஒரு விசேஷம் என்னவென்றால், சுவாமிக்கு அர்ச்சனை தமிழிலேயே செய்கிறார்கள். "நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!" என்று திருவாசக மந்திரங்களைச் சொல்லி அர்ச்சனை செய்தார்கள். இந்தப் புதுமையான ஏற்பாடு எங்களுக்கு மிக்க மகிழ்ச்சி தந்தது. சுவாமியும் சந்தோஷப்பட்டிருப்பார் என்பதில் சந்தேகமில்லை. செந்தமிழால் வைதவர்களையும் வாழ்விக்கும் தமிழ் நாட்டுத் தெய்வங்கள், தமிழில் மந்திரம் சொல்லி அர்ச்சனை செய்வதைக் குறித்து மகிழ்ச்சி அடையாமல் இருக்க முடியுமா?

பின்னர் திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் தலைவரும் அரசியல் சபை அங்கத்தினருமான ஸ்ரீ எம். ஸி. வீரபாகுப் பிள்ளை அவர்களின் இல்லத்தில் ஏற்பாடாகியிருந்த காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு நேரே வைகுண்டத்துக்குப் புறப்பட்டோம்!

(தொடரும்)




## கிராக்கிக்கு மெத்தனையோ குறைவாகத்தான்

எங்களிடம் சரக்குகள் விற்பனைக்குள்ளன. சிறந்த சாமான்களுக்கு வேறு விளம்பரம் ஏன். இதுவே எப்பொழுதும் எனது கொள்கை. எனினும், எங்கள் வர்த்தக முத்திரைக்கிருக்கும் நன்மதிப்பானது, அந்த முத்திரையை பிரசித்திப் படுத்துவதையே ஆதாரமாகக் கொண்டதென்பதை நாம் மறந்துவிடலாகாது. பிரசித்தப் படுத்துவது எதற்காகவென்றால், "நாங்கள் இன்னும் வேலை தொடர்ந்துதான் வருகிறோம். கூடிய சீக்கிரம் போதுமான சரக்குகள் உங்களுக்குக் கிடைக்கச் செய்வோம்" என ஆவசியக்காரர்களுக்கு உறுதி கூறவேதான்.

கம்பளி: பூராவும் கம்பளி ஸூப்பர் ப்ளாங்கெட்டுகளும் பிரயாண ரக்குகளும்—ட்வீடுகளும், கேரிய கம்பளி நிறுககளும், யூனியன் ஷர்ட்டிங்குகளும்.

பருத்தி: வெல்லா ஷர்ட்டிங்குகளும், கேகிய லாங்கிலாத்தும்—கோல்ட் ஸ்டாண்டர்ட் ஷர்ட்டிங்குகள்—லேம லாங்கிலாத்தும், சாயம் தோய்த்ததும்—ஸாம்ரா ஸூட்டிங்குகள் — டஸ்ரோர்கள் — ட்ரில்கள் — டிவில்கள் வகையரு......

பட்டு: 44"/45" அகலம், பற்பல சாயல்களில்.

தயாரிப்போர்கள்: தி பங்களூர் வூலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கோ., லிட்.



ஏஜண்டுகள், காரியதரிசிகள், ட்ரெஷரர்கள்

பின்னி & கோ.

(சென்னை) லிட்.

"ஆடு மார்க்கு" — [illegible]

# செல்லாயி

ஸத்யதாமா




சின்னத்தில் ஊன்றிய கைகளுடன் குடிசை வாசலில் உட்கார்ந்திருந்தாள் செல்லாயி. அவள் கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாக உதிர்ந்து கொண்டிருந்தது. அவளை அறியாமல் அவள் கண்கள் கால் பெருவிரலின் மீது சென்றன. 'விண், விண்' என்று வலியால் துடிக்கும் அவ் விரலைச் சுற்றிப் புடவைத் தலைப்பைக் கிழித்துக் கட்டியிருந்தாள். உள்ளிருந்து கசியும் இரத்தம் அந்தத் துணியின் மீது ஊறிக் கறை பட்டு சிவந்திருந்தது.

கால் விரல் வலியைவிடச் செல்லாயிக்கு மனப்புண்ணின் வலிதான் அதிகமாயிருந்தது. அன்று காலையில் காளியண்ணன் பத்திரகாளி ரூபத்துடன் அரிவாளை வீசி வெறித்த தோற்றத்தை நினைக்க நினைக்க அவள் உடல் நடுங்கியது. "ஐயோ! ஓர் அங்குல தூரம் அந்தக் கத்தி தாண்டி விழுந்திருந்தால்......? நல்ல வேளையாகக் கழுத்துக்கு வந்தது காலுடன் போச்சு!" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள்.

"பார்க்கப் போனால் அதுக்கு என் அவ்வளவு கோபம் வரணும்? அப்படி நான் என்ன சொல்லி விட்டேன்? புருசன் பெண்சாதின்னு சல்லாபம் இருக்கிறப் போலச் சச்சரவும் இருக்காதா? அதுக்காக அந்தக் கொலைகாரப் பாவி இப்படியா அரிவாளை வீசி வெறியணும்?" என்று எண்ணி மனம் துடித்த செல்லாயிக்கு, அன்று காலையிலும் முதல் நாள் சாயங்காலமும் நடந்த சம்பவங்களெல்லாம் அப்படியே நினைவுக்கு வந்தன.

முதல் நாள் மாலைப் பொழுது. பக்கத்துக் குடிசைப் பாஞ்சாலியுடன் ஆற்றுக்குச் சென்று திரும்பிய செல்லாயி, இடுப்பிலிருந்த தண்ணீர்க் குடத்தை இறக்கி 'சக்'கென்று கீழே வைத்தாள். அப்போது அவள் மனத்தில் மூண்டெழுந்த ஆத்திரம் முழுவதும் குடத்தின்மீது காட்டப்படவே, அதன் அடிப் பாகம் 'மளக்'கென்று உடைந்து, தண்ணீர் குடிசை முழுவதும் பெருக்கெடுத்தோடியது.

வழக்கம் போலவே அன்றும் மூன்று மணிக் கெல்லாம் தண்ணீருக்குப் புறப்பட்ட செல்லாயி பக்கத்துக் குடிசை வாசலில் நின்றுகொண்டு, "பாஞ்சாலி!" என்று கூப்பிட்டாள். "இதோ வந்துட்டேன், அக்கா!" என்று உள்ளேயிருந்து குரல் கொடுத்துக் கொண்டே பாஞ்சாலி வெளியே வந்தாள். அவளைப் பார்த்ததும் செல்லாயிக்குப் பொறாமையால் மனம் அதிர்ந்தது. காரணம், அவள் கட்டியிருந்த பச்சை நிறப் புடவைதான்!

"என்ன அக்கா, அப்படிப் பார்க்கிறீங்க!" என்று கேட்டு விட்டுக் கலகல வென்று சிரித்தாள் பாஞ்சாலி. அப்போது அவள் அழகைக் கண்டு செல்லாயி சொக்கிப் போனதில் வியப்பொன்றுமில்லை. செக்கச் சிவந்த அவள் மேனிக்கு அந்தப் பச்சை நிறப் புடவை அவ்வளவு பொருத்தமாக இருந்தது!

"ஏது! புதுச் சேலையாட்டமா இருக்குதே! எப்போ எடுத்தே, பாஞ்சாலி!"

"இது மாதிரி ஒண்ணு வேணும்னு கேட்டிருந்தேன். நேற்றுத்தான் அவுங்க எடுத்து வந்தாங்க!"

"ஆமாம், பாஞ்சாலிக்கு என்ன? மவராசி! கண்ணாலமாகிக் குடித்தனம் புகுந்து நாலு மாசம்கூட ஆகல்லே! அதுக்குள்ளாக எப்படிச் சொக்குப் பொடி போட்டு வசப்படுத்தி வச்சிருக்கா, புருசனை? இவள் கேட்டு வாய் மூடுவதற்குள் அவன் வாங்கிக் கொடுத்து விடுகிறான். அதைத் தாப் போல நானும்தான் இது மாதிரி ஒரு சேலை கேட்டு எத்தனை நாளாவுது?" என்று எண்ணிய வண்ணம் பாஞ்சாலியைப் பின் தொடர்ந்து சென்ற செல்லாயி, திடீரென்று ஏதோ நினைவு வந்தவள் போல, "ஏன் பாஞ்சாலி! அப்படின்னு நீ எது கேட்டாலும் உன் புருசன் வாங்கித் தராம இருப்பதில்லேன்னு சொல்லு!" என்றாள்.

"அதென்னமோ அக்கா! என் மூஞ்சியைப் பார்த்து அவுக இதுவரை நான் கேட்டது எதுவும் இல்லேன்னு சொன்னது கிடையாது!" என்று பாஞ்சாலி மிகவும் பெருமையுடன் சொன்னாள்.

தண்ணீர் மொண்டு கொண்டு திரும்பி வந்த பின், செல்லாயி மீண்டும் யோசித்துப் பார்த்தாள். "வீரப்பன் மட்டும் பாஞ்சாலிக்கு அப்படி வசப்பட்டு இருப்பது ஏன்? அவள் அழகுதான் அவனை அப்படி மயக்கி விடுகிறதாக்கும்!" என்று எண்ணிய அவள், அன்றிரவு தானும் தன்னுடைய அழகைக் கொண்டு எப்படியும் தன் கணவனிடம் புடவை விஷயத்தைப் பற்றிப் பேசி, அவனை ஜயித்து விடுவதென்று தீர்மானித்துக் கொண்டாள். உடனே பரபர வென்று வீட்டு வேலைகளை யெல்லாம் செய்து முடிக்கத் தொடங்கினாள்.





வேலைகள் யாவும் முடிந்ததும் தன்னைச் சிங்காரித்துக் கொள்ள ஆரம்பித்தாள். காற்றில் பறந்து கொண்டிருந்த கூந்தலை அவிழ்த்துக் கொஞ்சம் எண்ணெய் தடவிச் சீவிக் கொண்டையிட்டுக் கொண்டாள். பிறகு குடிசை வாசலில் இருந்த அரளி மரத்திலிருந்து நாலு பூவைப் பறித்துக் கொண்டையில் செருகிக் கொண்டாள். ஆடையின் தலைப்பை இழுத்து விட்டுச் சுருக்கங்களையும் நீவிவிட்டாள். பின்பு பாஞ்சாலியைப் போலவே தானும் நெற்றியில் ஒரு சாந்துப்பொட்டு வைத்துக் கொண்டாள். சிங்காரம் எல்லாம் ஒருவாறு முடிந்ததும், அவள் மனதில் பரிபூரண திருப்தி நிலவியது. வாசலில் நின்று புருஷனின் வரவை எதிர்பார்த்து நின்றாள்.

சாயங்காலம் ஐந்து அல்லது ஆறு மணிக்கெல்லாம் காளியண்ணன் பண்ணையிலிருந்து வந்து விடுவது வழக்கம். அன்று ஏனோ நன்றாக இருட்டிய பின்பும் அவன் வரவில்லை.

குடிசை முன்னிலையில் நின்று நின்று அலுத்துப்போன செல்லாயி, சலிப்புடன் உள்ளே போய் விளக்கைப் பொருத்தலானாள். வெளியே காலடிச் சத்தம் கேட்டது. விளக்குப் பொருத்திக் கொண்டிருந்த செல்லாயி திரும்பிப் பார்த்தாள். அவசரமாக உள்ளே நுழைந்த காளியண்ணன் அவளை நின்று கூடப் பாராமல், "செல்லாயி! உம்......சோறு போடு, சீக்கிரம்! அவசரமாய்ப் போகணும்!" என்று சொல்லிக் கொண்டே புறக்கடைப் பக்கம் சென்றான்.

செல்லாயிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "ஆமாம், உனக்கு எப்பத்தான் அவசரமில்லே? கட்டிய பெண்சாதிகிட்ட ஒரு நிமிசம் நின்று பேசக் கூடப் பொழுதில்லாமல் ராஜகாரிய மில்லே தட்டுப்பட்டுப் போவுது!" என்று முணுமுணுத்தாள்.

பின்புறம் சென்று விட்ட காளியண்ணன் காதுகளில் அவள் சொன்னவை ஒன்றும் விழவில்லை. கை கால்களைக் கழுவிக் கொண்டு வந்து உட்கார்ந்த அவன், கலயத்திலிருந்த சோற்றைத் தானே எடுத்துப் போட்டுக் கொண்டு இரண்டு வாய் அள்ளித் தின்றுவிட்டு எழுந்தான். பிறகு ஒரு துண்டுப் புகையிலையைத் திருகி வாயில் திணித்துக்கொண்டே, "ஏ, செல்லாயி! கதவை நல்லா மூடி விட்டுப் படுத்துக்கோ! ராத்திரிக்கு நான் பண்ணைக்குக் காவலாப் படுத்துக்கப் போவணும்!" என்று சொல்லி விட்டு, அவள் பதிலுக்குக் கூடக் காத்திராமல் வெளியே இருளில் மறைந்து விட்டான்.

அழுகை பொத்துக் கொண்டு வந்தது செல்லாயிக்கு. சற்று நேரம் சிலையைப் போல் நின்று கொண்டிருந்தாள். பிறகு கொண்டையிலிருந்த பூவைப் பிடுங்கி வீசியெறிந்துவிட்டு, முன் கதவைப் படீரென்று அறைந்து சாத்திவிட்டு உள்ளே வந்தாள். அங்கே சோற்றுப்பானை அப்படியே திறந்து கிடந்தது. அதை எடுத்து அப்பால் வைக்கக் கூடத் தோன்றாமல் விளக்கை மட்டும் அணைத்துவிட்டு முந்தானையை விரித்துப் படுத்துக் கொண்டாள். குடிசை முழுவதும் இருள் கப்பிக் கொண்டதைப் போலவே அவள் மனத்திலும் துக்கம் கவ்விக் கொண்டது.

மறுநாள் காலை நித்திரை கலைந்து எழுந்து உட்கார்ந்த அவள், கண்களைக் கசக்கிக் கொண்டே சுற்றிலும் பார்த்தாள். கிழக்கே அருணோதயமாகிக் கொண்டிருந்

தது. உதய சூரியனின் செவ்வொளி பட்டு ஆகாயம் முழுவதும் அவள் கண்களைப் போலவே சிவந்திருந்தது.

உள்ளே ஒரு மூலையில் சோற்றுக் கலயம் உருட்டி விடப்பட்டிருந்தது. முதல் நாள் இரவு பானையில் மீதியாயிருந்த சோற்றைத் தின்றுவிட்டுப் போன பூனைதான் அதை அப்படி உருட்டி விட்டிருக்க வேண்டும் என்று எண்ணினாள். உடனே அவள் மனக் கண் முன்னிலையில் முதல் நாள் சம்ப வங்கள் முழுவதும் மீண்டும் நினைவுக்கு வந்தன. தோல்வியடைந்த அவள் பெண்மை பள்ளத்தில் ஏக்கம் நிறைந்தது. அவள் வெளிப்புறத்தையே வெறிச்சென்று பார்த்துக் கொண்டு நின்றாள். செல்லாயியின் விசித்திரத் தோற்றத்தைக் கண்டு ஆச்சரியப் பட்டுக் கொண்டே காளியண்ணனும் குடிசை வாசலில் நின்று கொண்டிருந்தான். ஆனால், செல்லாயி அவனைக் கவனிக்க வில்லை. அவள் பார்க்குமிட மெங்கும் பச்சை நிறப் புடவை உடுத்த பாஞ்சாலியின் உருவமே தோன்றியது!

"ஏ, செல்வி! என்ன, காலையிலெழுந்து இப்படிப் பித்துப் பிடித்தாற்போலக் குந்தியிருக்கே!" என்ற கோபக் குரல் கேட்டதும் தான் காளியண்ணன் அங்கே நிற்பதை உணர்ந்தாள் அவள். ஆனாலும் மனதில் பொங்கிய ஆத்திரத்துடன் அவனையே பார்த்துக் கொண்டு சிலைபோல் உட்கார்ந்திருந்தாளே தவிர, அவள் இருந்த இடத்தை விட்டு அசையவில்லை.

"ஏ! உன்னைத்தானே? ஏன் இப்படிப் பேயறைஞ்சாப் போலே குந்திகிட்டு வீணு என் கோவத்தைக் கிளப்பறே! காலையிலே வேலை ஏதாச்சு இல்லையா?" என்று கடிந்தான் காளியண்ணன்.

"ஆமாம், நீ பெரிய ஆம்பிள்ளைதான், போ! கட்டின பொஞ்சாதிக்கு ஒரு சேலை வாங்கித்தரத் துப்பு இல்லை! உன் கோவத்தைப் பார்க்கலே, கோவம்! என் தலையைச் சீவிடுமோ உன் கோவம்?" என்று சீறி விழுந்தாள் செல்லாயி.

இதைக் கேட்டதும் காளியண்ணன் கண்கள் சிவந்தன. "ஏன், வெமாட்டேன்னு நினைச்சட்டே! வாழை மரம் கணக்கா வெட்டிப் போட்டு விடுவேன், தெரியுமா?" என்று கர்ச்சித்தான்.

"அப்படித்தான் வெட்டிப் போடேன்! உன்னைப் பிடித்த சனியன் ஒரு வழியா ஒழிஞ்சுப் போயிடட்டும்!" என்றாள் செல்லாயி.

அவ்வளவுதான், காளியண்ணன் கையிலிருந்த அரிவாள் 'விண்' என்று பறந்தது. நல்ல வேளையாகக் குறி தவறி அவள் காலில் வந்து விழுந்தது.

அரிவாளின் கூரிய முனை குத்தி அவள் கால் பெரு விரலிலிருந்து இரத்தம் 'குபு குபு' வென்று பாய்ந்தது. "ஐயோ!" என்று அலறிக்கொண்டே செல்லாயி காலைப் பிடித்துக் கொண்டு கீழே விழுந்தாள்.

* * *

மனதின் பாரம் சற்றுக் குறைந்ததும் மெல்ல எழுந்து நின்றாள் செல்லாயி. புடவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, கதவை இழுத்துச் சாத்திக் கொண்டு வெளியே வந்தாள். அவள் கால்கள் அவளையுமறியாமல் பாஞ்சாலியின்



குடிசைக்குச் சென்றனள். உள்ளே பாஞ்சாலி ஏதோ குஷியாகப் பாடிக்கொண்டிருப்பது கேட்டது:

"சிதம்பரம் போகாமல் இருப்பேனோ—என்
ஜென்மத்தை வீணுகக் கழிப்பேனோ!"

என்ற அடிகள் கணீரென்று செல்லாயியின் செவிகளில் விழுந்தன.

"நீ என் ஜென்மத்தை வீணுகக் கழிக்கணும், பாஞ்சாலி! என் ஜென்மம் அல்லவா வீணுய்க் கழியுது!" என்று மனத்திற்குள்ளேயே சொல்லிக்கொண்டு, செல்லாயி மெல்ல உள்ளே எட்டிப் பார்த்தாள். அவளைக் கண்டதும் பாஞ்சாலி பாடுவதை நிறுத்திவிட்டு, "வா, அக்கா! வா! ஏது, இவ்வளவு சீக்கிரமாகவா சோறாக்கி விட்டாய்?" என்று வரவேற்றாள்.

"ஆமாம், நான் பொண்ணு பொறந்த சவரணைக்குச் சோறாக்காமல் வேறே என்ன வேலை? என்னைப்போலவா உனக்கு? எப்பப் பாரு, ஆனந்தமாப் பாட்டு பாடிக்கிட்டே பச்சைக் கிளி கணக்கா பறந்து கிட்டிருக்கே! மகராசி, நீ!"

"சரியாய்ப் போச்சு! நான் பாடிக் கொண்டிருப்பதுதான் கண்ணுக்குத் தெரியுது! நான் படற உதையும் குத்தும் உங்களுக்கு எங்கே தெரியப் போவுது?"

"என்ன! உதையும் குத்துமா? உன் புருஷன்தான் நீ என்னுன்ன எண்ணெயாக உருகிட்டு வருதே! அதுவா உன்னை உதைக்கும்? நம்ப முடியவில்லையே!"

"ஐயோ! அவுக சமாசாரம் உனக்கு என்ன தெரியும்? சுயபுத்தியோடே இருக்கச்சே அவுக நல்லக் கம்பிதான்! ஆனால் சாயங்கால வேளையிலே சில தினம்...... ஆளே அல்ல மாறிப் போவுது? அக்கா! வெளியே சொல்லிக்கிறது என்னமோ கேவலம்தான்! ஆனாலும் கூடப் பிறந்த உங்க கணக்கா நெனைச்சுக்கிட்டு உங்கக் கிட்டே மாத்திரம் சொல்லுகிறேன். நேத்து இரவு போதையிலே, எனக்குக் கிடைச்ச அடியும் குத்தும் எப்படியிருந்தது, தெரியுமா?" என்று சொல்லிப் புடவைத் தலைப்பை விலக்கிக் காட்டினாள்.

ஐயோ, பாவம்! பாஞ்சாலியின் முதுகு முழுவதும் கரணை கரணையாக வீங்கிக் கிடந்தது!

செல்லாயி ஒரு கணம் யோசித்தாள். இது என்ன அதிசயம்! இப்படி அடியும் குத்தும் வாங்கியும்கூடப் பாஞ்சாலி எவ்வளவு குஷியாகப் பாடிக் கொண்டே வாழ்க்கையை நடத்துகிறாள்!



மானேஜர் :—என்னப்பா இது, எப்போ பார்த்தாலும் லீவுதானா? லீவு தரமுடியாது. போ! உன்னை ஆபீஸிலிருந்து டிஸ்மிஸ் செய்துவிடப் போகிறேன்!

குமாஸ்தா :—இது லீவு லெட்டர் இல்லீங்க; ராஜிநாமா லெட்டருங்க!

"உன்னைக் கையெடுத்துக் கும்பிட வேணும், பாஞ்சாலி! இவ்வளவு கஷ்டத்தையும் பாராட்டாமல் ஆனந்தமா பாடிகிட்டு வானம்பாடியாக அல்ல இருக்கே நீ!" என்றாள்.

பாஞ்சாலி சிரித்தாள். "உடம்பு வலிக்கும் போது நானும் அழத்தான் செய்வேன், அக்கா! அப்போ பாட மாட்டேன்! தாங்க முடியாம வலிக்கும்போது இந்த வாழ்வே வெறுத்துப் போவுது! எங்கேயாச்சும் குளத்திலே குட்டையிலே விழுந்து உயிரை விட்டுடலாமான்னு கூடத் தோணத்தான் செய்யுது. ஆனால் உடம்பிலேயிருந்த வலி நீங்கினதும் எனக்கு என்னமோ மனசிலேயிருந்த புண்ணும் ஆறிடுது!"

“நல்ல விசித்திரப் பொண்ணு, நீ! இப்படி அடியும் குத்தும் பட்டுக்கிட்டுக்கூட ‘புருசன், புருசன்’ இன்னுகிட்டிருக்கே!”

“அக்கா! அப்படிச் சொல்லிடாதிங்க! அவுங்க அடிக்கிறாங்க வையறாங்க இன்னு நாமும் கோவிச்சுக்கிறது தருமமா, அக்கா? அவுங்களுக்கு மட்டும் நம்ம மேலே பிரிய மில்லையா? கோவத்திலே அடிக்கிற கை தானே சந்தோஷத்திலே அணைக்கவும் செய்யுது! குடும்பம் என்று இருந்தா சுகம், துக்கம் — சண்டை, சல்லாபம் எல்லாம் தானே இருக்கும்?”

செல்லாயியின் மனம் குழம்பியது. அதற்கு மேலே அங்கே யிருக்கப் பிடிக்க வில்லை அவளுக்கு. “சரி, நான் வரேன்!” என்று கிளம்பினாள்.

அப்போதுதான் பாஞ்சாலி அவள் நொண்டி நொண்டி நடப்பதைக் கவனித் தாள். “என், அக்கா! அது என்ன, காலிலே கட்டு?” என்று கேட்டாள்.

செல்லாயிக்கு மனதில் ஏதோ சுருக் கென்றது. என்ன பதில் சொல்லுவது என்று ஒரு நிமிஷம் விழித்தாள். உடனே சமாளித்துக் கொண்டு, “ஒண்ணுமில்லை! அரிவாக் கத்தியைக் கூரையில் செருகப் போனேன். அது தவறிக் காலில் விழுந்து விட்டது!” என்று சொல்லிக் கொண்டே வேகமாய் வீட்டை நோக்கி நடந்தாள்.

வீட்டுக்கு வந்ததும் அவள் சிந்தனையி லாழ்ந்தாள். “அவங்களுக்கு மட்டும் நம் மீது ஆசையில்லையா, அக்கா! அடிக்கிற கைதானே நம்மை அணைக்கவும் செய்யுது!” என்ற பாஞ்சாலியின் வார்த்தைகள் அவள் செவியை விட்டு அகலவே யில்லை.

அவ்வளவுதான்; காளியண்ணன் மீதி ருந்த கோபமெல்லாம் பறந்தே போய் விட்டது. காலையில் நடந்த சம்பவங்களைச் சாந்தமாய் நினைத்துப் பார்த்துக் கொண்ட அவள், “ஆமாம், நம்ம மேலேயுந்தான் தப்பு இருக்குது! ஏதோ அது கோவத் திலே சத்தம் போட்டா நானும் ஏன் எது மாறுப் பேசணும்? இது கனலை ஊதிப் பெரு நெருப்பு ஆக்கக்கொண்டுதானே அப்படி அது கத்தியை வீசி யெறிஞ்சது!” என்று தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள்.

* * *

தூரத்தில் இருக்கும் ஓட்டுக் கம்பெனி யின் ஊது குழல் காதைக் கிழிக்கக் கூவி யது. கூலியாட்களெல்லாம் கஞ்சி

## வரவேற்பு!













சென்ற 11—5 '47 ஞாயிற்றுக்கிழமை யன்று நமது காரியாலயத்தைச் சேர்ந்த சிரஞ்சீவி ஸ்ரீநிவாசன், கர்நாடக் ஸ்டுடியோ முதலாளியான ஸ்ரீ ராமச்சந்திரய்யரின் சகோதரர் குமாரி சௌபாக்கியவதி பத்மாசினியை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்றுப் பூரண மனிதரானார்! விவாகத்தின் போது பல பிரபலஸ்தர்களும் பிரமுகர்களும் விஜயம் செய்து, அகமும் முகமும் மலரத் தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள்.

குடிக்க அனுப்பிவிட்டுக் கால்வாயில் இறங்கினான் காளியண்ணன். கைகால்களைக் கழுவிக் கொண்டு, இரண்டு கை தண்ணீரையும் அள்ளிக் குடித்து விட்டுக் கரையேறியதும், தலையில் தூக்கிய சட்டியுடன் தூரத்தில் வரும் செல்லாயியைக் கண்டான். சற்றும் எதிர்பார்த்திராத வகையில் அவளைக் கண்டதும் ஆச்சரியத்தால் விழித்தான்.

அவள் நொண்டி நொண்டி வந்துகொண்டிருந்தாள். அவன் மனம் பச்சாத்தாபத்தால் துடித்தது. தன்னை நெருங்கியதும், "கால் ரொம்ப வலிக்கிறதா, செல்லாயி! அப்பன்னு என் வெய்யிலில் கஷ்டப்பட்டு வந்தே?" என்றான்.

அவன் வார்த்தைகளின் கனிந்த அன்பு அவள் கால் வலியை உடனே நீக்கிவிட்டது. முகத்தில் முறுவல் தோன்ற தலையிலிருந்த சட்டியை இறக்கி வாய்க்கால் கரையில் வைத்தாள். "அது கிடக்குது, விட்டுத் தள்ளுகிறேன்! காலையிலேயே நீ பட்டினியாய்ப் போயிட்டியேன்னுதான் மீனைக் குழம்பும் சோறும் ஆக்கிக் கொண்டு வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே, சட்டியை மூடிக் கட்டியிருந்த துணியை அவிழ்த்தாள்.

சுடச்சுடச் சோற்றையும் தனக்குப் பிடித்தமான மீனைக் குழம்பையும் கண்டதும் காளியண்ணன் நாக்கில் ஜலம் ஊறியது. உடனே தலையிலிருந்த முண்டாசை அவிழ்த்துக் கீழே போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

செல்லாயியின் அன்பு ரசத்துடன் கலந்த அந்தச் சோற்றையும் மீனையும் சாப்பிட்டு உள்ளமும் உடலும் குளிர்ந்த காளியண்ணன், தலைக்குப் பதமாக துண்டைச் சுருட்டி வைத்துக் கொண்டு, அங்கிருந்த ஆலமரத்தின் வேரின் மீது சாய்ந்து கொண்டான். சட்டியைக் கழுவி வைத்துவிட்டு வந்த செல்லாயியும், அவன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு இடையில் செருகியிருந்த வெற்றிலைப் பையை உருவினாள். அதிலிருந்த ஒரு காய்ந்த வெற்றிலைச் சருகை எடுத்துப் பாதியாகக் கிழித்து அவனுக்குக் கொடுத்தாள். மீதியைச் சுருட்டித் தன் வாயிலும் போட்டுக் கொண்டாள்.

வெற்றிலையை மென்று கொண்டே, "செல்லாயி! மேட்டுப் பங்களாவிலே பெரிய தொரை வந்திருக்காங்களாம்! பட்டாளத்துக்கு இன்னும் ஆள் எடுக்கிறாங்களாம். நானும் போயி அவுககிட்ட சொல்லி மிலிட்டரியிலே சேர்த்துக்கலாமின்னு பார்க்கிறேன். இங்கே யிருந்தாத்தான் உனக்கு ஒரு சீலை வாங்கித் தரக்கூட வகையில்லாமல் இருக்குதே!" என்றான் காளியண்ணன்.

"இதோ பாரு! எனக்குச் சீலையும் வேண்டாம், சித்திலும் வேண்டாம். எனக்கு என் ராசா நீ இருந்தாப்போதும்!" என்று சொல்லி அவன்மேல் சாய்ந்தாள் செல்லாயி.

" கல்கி "யின்

# இரு புத்தகங்கள்

| | | |
|---|---|---|
| 1. | சாரதையின் தந்திரம் | 4 8 0 |
| 2. | மகுடபதி | 4 0 0 |

★

தபால் செலவு தனி

★

## புதுமைப் பதிப்பகம் லிமிடெட்,

காரைக்குடி

---

# வாழ்க்கை விநோதம்!



கல்யாணமான புதிதில் சிறிய கார் வாங்கினவர்கள்....

வயதான காலத்தில் பெரிய கார் வாங்கினார்கள்!

# நரம்புகள் உங்களை தூங்கவிடாமல் விழித்திருக்கும்படி செய்யும்பொழுது



சுக நித்திரை இல்லாத இரவுகள் உங்கள் ஆரோக்யத்துக்கு விரைவில் நாசம் விளைவிக்கின்றன. நினைத்த காலையில் பலக் குறைவில்லாமலும், உற்சாகமாகவும், உறுதியாகவும் இருக்க நீங்கள் இரவு தோறும் அயர்ந்த சுக நித்திரை அனுபவிக்கவேண்டும். இதனால் நீங்கள் உங்களுடைய நரம்புகளை சரியான நிலைமையில் வைத்திருக்க வேண்டுமென்று ஏற்படுகிறது.

உங்கள் தேகத்தையும் மூளையையும்போல் நரம்புகளுக்கும் போஷாக்கு தேவை. இதை சுறுசுறுப்புள்ள ருசிகரமான டானிக் உணவு பானமான "ஓவல்டின்" அளிக்கிறது. படுக்கைக்குப் போகுமுன் ஒரு கோப்பை "ஓவல்டின்" அருந்துங்கள். நரம்புகளை சமனப்படுத்தி, காலையில் பலக் குறைவில்லாமலும், உற்சாகமாகவும், சுறுசுறுப்புடனும் எழுந்திருக்கச் செய்யும்படியான அயர்ந்த நித்திரை அளிப்பதில் அது சிறந்தது.

"ஓவல்டின்" பழுத்த பார்லிமால்ட், புதிய ஏடுடன் கூடிய பசுவின்பால், விலை மதிப்புள்ள இயற்கை வீடமின்கள், மற்றும் இதர ஆகார சத்துக்களைக் கொண்டும் தயாரிக்கப்பட்டது. உங்களை வீரமும் ஆரோக்யமும் உள்ளவர்களாக இருக்கச் செய்யவேண்டிய ஆகார சத்துக்களை அது உடையது. போலிகளை விலக்குங்கள்.




எல்லா சிறந்த வியாபாரிகளிடமும் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ (இந்தியா) லிட்., த. பெ. நெ. 1205, மதராஸ்: பம்பாயிலும், கராச்சி கல்கத்தாவிலும்:

தி இங்லிஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாப்ரேடிங் ஹோல்சேல் சொஸைடி லிட்., கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

**'ஓவல்டின்'**

**OVALTINE** பலவிருத்தி ஆகார பானம்



"ஓவல்டின்" அயர்ந்த சுக நித்திரையை அளிக்கிறது.

OV/109


I

# குடுமியின் மகத்துவம்

கி. ரா. கோபாலன்

வாசலில் வண்டிக்காரன் நின்று அவசரப்படுத்திக் கொண்டிருந்தான். வீட்டிலுள்ளவர்கள் "நாழிகையாகிவிட்டது; ராகு காலம் வந்துவிடும். புறப்படு, புறப்படு!" என்று துடித்தார்கள். அப்பொழுதுதான் நான் தலையை அழகாகப் படியச் சீவி முடிந்து கொண்டிருந்தேன். பெண் பார்க்கப் போகிறதென்றால் சாதாரணமா?

என்னுடைய அழகிற்கே முக்கிய ஆதாரமாக இருந்தது என்னுடைய 'குடுமி' ஒன்றுதான். சாதாரண சமயங்களிலேயே அதைச் சீர்குலையாமல் அழகுபட வைத்திருப்பேன். பெண் பார்க்கப் போகும் பொழுது ......அதன் சிரமம் என் தலைக்கும் சீப்பிற்குந்தான் தெரியும்.

கண்ணாடியைக் கடைசி முறையாகப் பார்த்தேன். கச்சிதமாயிருந்தது. ஆனால், முன்புறந்தான் தெரிந்தது; பின்புறம் தெரியாதது அடங்காக் குறையாக இருந்தது. எப்படியாவது கழுத்தைத் திருப்பி அந்த அழகையும் பார்த்துக் குறை யடக்கலாமென்று முயற்சி செய்தேன். கழுத்து வலியெடுத்ததே தவிர, முடியழகு கண்ணிலும் படவில்லை; கண்ணாடியிலும் படவில்லை. ஒருவிதமாக மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு தலையைத் தொட்டுத் தொட்டுத் தடவிக் கொண்டே புறப்பட்டேன்.

பெண் அழகாய் இருந்தாள் என்று நான் சொன்னால், என் மனதிற்குப் பிடித்திருந்தாள் என்றுதானே அர்த்தம்? பெண்ணின் தகப்பனார் என் சம்மதத்தைக் கேட்ட பொழுது கூடியவரையில் என் பதட்டத்தை அடக்கிக்கொண்டு, "மனதிற்கு ரொம்பப் பிடித்திருக்கிறது" என்றேன்.

பெண்ணுக்கும் கட்டாயம் என்னைப் பிடித்திருக்க வேண்டும். என்னைப்போல் கட்டுக் குடுமியை வைத்துக் கொண்டு இவ்வளவு அழகாக எவன் கிடைக்கப்போகிறான், இந்தக் காலத்தில்? அவள்கூட ஓரக் கண்ணால் என் குடுமியையே பார்த்துக் கொண்டிருந்ததை நான் கண்டு பிடித்து விட்டேன்.



இரண்டு மூன்று நாட்களாகிவிட்டன. கல்யாணம் ஒருவிதமாகப் பேசி முடிவாகிவிட்டதாகத்தான் நான் கருதினேன். ஆனால் திடீரென்று வீட்டில் அக்கினிப் போடும் படியான பேச்சு காதில் விழுந்தது. அந்தப் பெண்ணுக்கு நான் குடுமி வைத்துக் கொண்டிருப்பது பிடிக்கவில்லையாம்!

இதென்ன விபரீதம்! இந்தக் காலத்துப் பெண்களுக்கே உண்மையில் அழகு எங்கே இருக்கிறது என்று தெரியவில்லை. பந்துபோல் அள்ளிமுடிந்திருக்கும் இந்தக் குடுமியில் மோகங் கொள்ளவில்லையென்றால், அவள் அழகையே அனுபவிக்கத் தெரியாதவளென்றுதான் சொல்ல வேண்டும்!

நல்ல பெண்; லட்சணமான பெண்தான். அதற்காக — அவளுக்காக, நான் இத்தனை நாளும் அருமையாய் வளர்த்த குடுமியை எடுத்து விடுவதா? சே, கூடவே கூடாது! ஆனால், அதற்காக அப்பொழுதுதான் பாற்கடலிலிருந்து துள்ளிக் குதித்து வந்த மகாலக்ஷ்மி போன்ற சர்வ சௌந்தரியமும் பொருந்திய பெண்ணைக் கைநழுவ விட்டுவிடுவதா? மூளை குழம்பியது. இந்தச் சந்தர்ப்பத்தில் என் அருமை நண்பன் சங்குவின் யோசனை எவ்வளவு இன்றியமையாதது! வெய்யிலைக் கூட லட்சியம் செய்யாது அவன் வீட்டை நோக்கி நடந்தேன்.

விஷயத்தைச் சொன்னதும் வழக்கம் போல் அவனுடைய சாமர்த்தியமான

கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டி யிருந்தது.

"உன் மனதிற்கு அந்தப் பெண் பிடித்திருக்கிறாளா?"

"அசாத்யமாய்ப் பிடித்திருக்கிறாள்."

"அப்படி யென்றால் பார்த்தவுடனேயே காதல்......"

"ஆமாம், இல்லா விட்டால் என் மனது இப்படித் தடுமாறுமா?"

"சரி, உடனே கல்யாணம் செய்து கொள்வதுதான் நல்லது."

"அது சரி; ஆனால் குடுமி......?"

"குடுமி விஷயம் யோசிக்க வேண்டியது தான். ஆனால் காதல் தலை போகிற பெரிய விஷயமாயிற்றே? நீ குடுமியை எடுத்துத்தானாக வேண்டும்" என்று சங்கு அடித்துச் சொல்லி விட்டான். இருந்தாலும் அவன் மனதில் இன்னும் சற்றுப் படும்படியாகச் சொன்னால் வேறு நல்லயோசனை ஏதேனும் சொல்ல மாட்டானா?

"சங்கு! நீயே எவ்வளவோ தடவை சொல்லியிருக்கே, 'கோபு உனக்கு இந்தக் குடுமி ஒன்று இருக்கிறதுதான் பார்க்கச் சகிக்கிறதன்னு! அப்படி இருக்கச்சே இந்தக் குடுமியையும் எடுத்துட்டா.........?" என்று ஆரம்பித்தேன்.



சங்கு எதையோ மறந்து போய்த் தீர்மானம் செய்து விட்டவன்போல் உதறிக் கொண்டு, "ஆமாம், ஆமாம்! உனக்குக் காதலைவிடக் குடுமிதான் முக்கியம். நான் ஏதோ உலகத்துக்குச் சகஜமாய்ச் சொல்ல வேண்டியதைத் தவறிப் போய் உன்னிடம் சொல்லி விட்டேன். அதுவும் தவிர, கல்யாணம் ஆகிறதுக்கு முன்னாடியே குடுமியை எடுன்னு சொல்லுகிற பெண், கல்யாணமான பிறகு 'உங்களுக்கு மூக்கு ரொம்ப நீளமாயிருக்கு; கொஞ்சம் அறுத்துக் கொள்ளுங்கள்!' என்று சொன்னால், நீயும் காதல் வேகத்திலே அறுத்துக் கொண்டு நிற்க வேண்டுமா, என்ன?"

என்ன பயங்கரம்! சங்கு இப்படிச் சொன்னபோது என் உடல் உள்ள மெல்லாம் மழையில் நனைந்த கருங்கல்போலச் சில்லிட்டு விட்டது. பயத்தினால் அந்தப் பெண்மீது கொண்ட தெய்விகக் காதல் அலைகளெல்லாம் நீராவியாக மாறி இருந்த இடம் தெரியாமல் எங்கோ மறைந்து விட்டன.

கண்டிப்பாகச் சொல்லி விட்டேன், குடுமியை எடுக்க முடியாதென்று! அப்படியென்றால் தனக்கும் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லை என்று அந்தப் பெண்ணும் 'பளிச்' சென்று சொல்லி விட்டாள்!

இரண்டு மூன்று மாதங்கள் யாரும் தடை செய்யாமல் ஓடின. நானும் எவ்வளவோ பெண்களைப் பார்த்து விட்டேன். ஒரு பெண்ணுக்கும் என்னைப் பிடிக்காத காரணம் என் குடுமிதான் என்று கடைசியில் விளங்கியது. வேறு வழியில்லாமல் இவ்வளவு காலமாகத் தடவித் தடவி வளர்த்த குடுமியை லக்ஷ்யம் செய்யாது ஒரு நாள் வெட்டி எறிந்து விட்டுக் கிராப்புக்கு அஸ்திவாரம் போட்டேன். என்ன அழகு, போங்கள்! அந்த வாகு — படிமானம், வளைந்து வளைந்து சுருள் சுருளாக......அடாடா? எவ்வளவு முட்டாள்தனம்! எனக்குக் கிராப்பு இவ்வளவு அழகாயிருக்குமென்றால் என் நான் இவ்வளவு அதிரூப லாவண்யமுள்ள பெண்களை யெல்லாம் கைசோர விட்டிருக்க வேண்டும்?

இப்பொழுதுதான் என்ன மோசம் போய் விட்டது? என்னைப் பார்க்கும் எந்தப் பெண்ணும் இப்பொழுது ஆசைப் படாமல் தப்பித்துக் கொள்ள வழியில்லை. அமெரிக்கப் பத்திரிகை ஒன்றில் விளம்பரம் ஒன்று பார்த்தேன். வாசனை கிரீம் ஒன்றைத் தலையில் தடவிக் கொண்டுள்ள ஒருவனைத் தொடர்ந்து இருபது இருபத்தைந்து மங்கையர் ஓடுவதுபோல் படம் போடப் பட்டிருந்தது. உடனே அந்தக் கிரீமை வரவழைத்து நானும் தடவித் தலையைப் படிமானமாயும் பளபளப்பாயும் வாரிக் கொண்டு என்னை நூற்றுக் கணக்கான

அழகிய பெண்கள் தொடர்ந்து வருவது போல் சில நாள் கனவு கண்டேன்.

ஒரு பெரிய இடத்துப் பெண். அழகி என்று அடக்கமாய்ச் சொல்லிவிட முடியாது. ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷன் அவளைப் பார்த்திருந்தால் அவளுடைய ரூப சௌந்தர்யத்தை வர்ணிக்க இன்னும் ஆயிரம் நாவைப் பெறக் கொடிய தவம் செய்ய ஆரம்பித்து விடுவான். அப்படியிருக்க, கேவலம் நான் எம்மாத்திரம்? அவளைப் பார்த்ததுதான் தாமதம்; இரண்டாவது முறையாக என் மனத்தில் தெய்விகக் காதல் தோன்ற ஆரம்பித்தது!

பணக்கார இடம்! ரதிமாதிரி பெண்! வரதக்ஷிணை போன்ற சில்லறை விஷயங்களுக்குக் குறைவில்லை. என்னைவிட வீட்டிலுள்ளவர்களின் துடிப்புத்தான் அசாத்யமாயிருந்தது. "எல்லாம் ஒத்துப் போய் விட்டது. அந்தப் பெண்ணுக்கு ஒரே ஒரு குறை; அற்ப விஷயம்! அதுவும் நிவர்த்தியாகிவிட்டால் அடுத்த முகூர்த்தத்திலேயே முடித்து விடலாம்......" என்று இழுத்தார்கள். நானும் சிரத்தையோடு அந்தக் குறையைத் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டேன்.

"எல்லாம் சரி! உங்களுக்கு இந்தக் கிராப்பு அவ்வளவு லட்சணமாயில்லையாம். ஆகையினாலே அதை எடுத்துவிட்டுக் குடுமி வைத்துக் கொண்டால் போதும்!" என்று சொன்னபோது, எனக்குத் தலைமாத்திரம் சுற்றியதா, உடம்பும் சேர்த்து சுற்றியதா என்று தெளிவாகச் சொல்ல முடியாது. யோசித்தேன், யோசித்தேன்; இரண்டு மூன்று நாள் யோசித்தேன். இந்த உலகத்தில் பெண்கள் உள்பட சகல ஜீவராசிகளின் குண விசேஷங்களைப் பற்றி வீட்டில் அவ்வளவு நீண்ட யோசனைக்கு இடம் கொடுக்கிறார்களா? என் கிராப்பு பெரிதா, பெரிய இடத்துச் சம்பந்தம் பெரிதா, அவர்களுக்கு? அவர்களுடைய தொந்தரவு தாங்காமல் ஒரு நல்ல வேளையில் குடுமி வைத்து க்ஷவரம் செய்து கொண்டேன்.

மீண்டும் ஏமாற்றம்! இந்த ஏமாற்றத்தில் என்னைவிட என் வீட்டிலுள்ளவர்களின் மூச்சுத்தான் நின்றுவிடும் போலிருந்தது. அந்தப் பெண் நான் குடுமி வைத்துக் கொண்டால் இன்னும் கொஞ்சம் லக்ஷணம் ஏற்படுமோ என்று நினைத்தனளாம். அதற்கு நேர்மாறாக நான் மிகவும் அவலக்ஷணமாகி விட்டேனாம். இதற்காக அந்தப் பெண்மீது எந்த நீதி ஸ்தலத்தில் போய் நான் மான நஷ்ட தாவா தொடருவது?

காதல், கல்யாணம் இவை ஒருபுறம் இருக்க, 'கிராப்பா குடுமியா? எது அழகு?' என்ற கேள்வியே ஓயாத பம்பரம் போல் என் மனத்தில் சுற்றிக் கொண்டிருந்தது. கடைசியில் குடுமிதான் ஸ்ரேஷ்டமானது என்ற முடிவுக்கு வர 'புராதன தர்மம்' என்ற பத்திரிகையில் வைருதளி ஒருவர் எழுதியிருந்த 'குடுமியின் மகத்துவம்' என்ற கட்டுரையே சாதனமாயிருந்தது.

குடுமி வைத்துக்கொண்டிருப்பவர்கள் பெருமையும் ஆத்ம திருப்தியும் அடைய வேண்டுமானால், அந்தக் கட்டுரையில் மணி போல் உதிர்த்த வார்த்தைகளை அடியில் எழுதியிருக்கிறேன். எவ்வளவு தடவை வேணுமானாலும் படித்துக் கொள்ளுங்கள்:

"எவனொருவன் அழகையும் ஆடம்பரத்தையும் கருதாமல் முன் தலையில் க்ஷவரம் செய்து கொண்டு குடுமி வைத்துக் கொள்கிறானோ, அவனுடைய பித்ருக்கள் செய்த புண்ணியம்தான் பலிதமடையும்."





# காலக்ஷேபம்

## நல்ல யோசனை

பையன் :—அப்பா ! ஓரணாக் கொடு, சீக்கிரம் கொடு, நாழியாய் விட்டது .........

அப்பா :—எதற்காக ஓரணா ?

பையன் :—பள்ளிக்கூடத்திலே ஒரு மலைப் பாம்பு வந்திருக்கிறது. அதைப் பார்ப்பதற்கு ஓரணா டிக்கெட் வைத்திருக்கிறார்கள். நான் பார்த்துவிட்டு வருகிறேன், அப்பா !

அப்பா:—போடா, முட்டாள் ! மலைப் பாம்பு பார்ப்பதற்குக் காசு செலவழிப்பானேன் ? உன் பாடப் புஸ்தகத்தி லிருக்கும் மலைப் பாம்புப் படத்தைப் பார்த்து விடு !

★

## ரொம்ப சரி !

"என் மாமனார் இந்தப் பக்கத்திலே நல்ல நாயாகப் பார்த்து வாங்கி அனுப்பச் சொல்லியிருக்கிறார் !"

"நல்ல நாயாக அகப்பட்டு விட்டதா ?"

"என்னை உடனே புறப்பட்டு அங்கே வரச் சொல்லி எழுதி யிருக்கிறார் !"

★

## நியாயந்தான் !

ஒருவர் (கோபமாக):—என்ன, வக்கீல் ஸார் ! போன மாதம் இரண்டு தரம் நான் உங்களிடம் யோசனை கேட்டதாகச் சொல்லிப் 'பில்' கேட்கிறீரே ! நான் ஒரு தடவைதானே யோசனை கேட்டேன் ? ஞாபகமறதியாக ஒரு வேளை ......!

வக்கீல் :—அதெல்லாம் இல்லை : எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. அன்று யோசனை கேட்க வந்த நீர், கொஞ்ச நாம் போய்ப் பிறகு மழை பெய்கிறது என்று என்னிடம் 'குடை இருக்கிறதா ?' என்று கேட்கவில்லையா ? அப்படிக் கேட்டது இரண்டு தரம் யோசனை கேட்டதாகாதா ?

★

## அவருக்கு வேண்டியது !

ஒருவர் :—இந்தப் படத்துக்கு நான் பத்து ரூபாய் கொடுக்கிறேன் ; இப்போதே வேண்டும்.

சித்திரக்காரர் :— கொஞ்சம் பொறுங்கள் ; படத்தைப் பூர்த்தி செய்து நாளைக்குத் தருகிறேன் !

ஒருவர் :—சிரமப் படாதீர்கள் ; எனக்குப் படம் அவசியமில்லை. ஒரு பஞ்சாயில் ஒட்டுப் போடுவதற்கு இந்தத் துணிதான் எனக்கு வேண்டி யிருக்கிறது !

## இளைத்த காரணம் !

நண்பர் :—என்னங்க ! இப்படி இளைத்துப் பாதி உடம்பாய்ப் போய் விட்டீர்களே !

காதல்வரக்காரர் :—கல்யாண காலமில்லே ! இப்போதெல்லாம் நமக்கு இரவு பகல் என்று பாராமல் உழைக்க வேண்டிதானே ? அதனாலே நான் இளைத்துப் போய் விட்டேன் !

★

## தேடும் விஷயம் !

அவர் :—என்ன ஸார், அப்படி விழுந்து விழுந்து அந்தப் பருத்தறிவுப் போட்டிப் பரிசு பெற்றவர் ஜாபிதாவைப் படிக்கிறீரே ! நீர் ஏதாவது கூபன் அனுப்பி யிருந்தீரா, என்ன ?

மற்றவர் :—இல்லை, இல்லை, நான் ஒரு நாவல் எழுதிக் கொண்டிருக்கிறேன். அதில் கதாநாயகனுக்கும் பெயர் வைக்க வேண்டும். அதைத்தான் இந்த ஜாபிதாவில் தேடிக் கொண்டிருக்கிறேன்.

★

## அவன் பிரார்த்தனை !

ஜெயில் அதிகாரி :—டேய், கைதி ! இன்று ஜெயிலுக்கு ஜட்ஜ் துரை வருகிறார் !

கைதி :—நன்று அகப்பட்டுக் கிட்டாரா ? வேணும் அவருக்கு ! என்னைத் தண்டிக்கிற போதே அவரும் இருடிக்கிட்டு மாட்டிக்க ணும்னு நான் வேண்டிக்கிட்டே இருந்தேன் !

★

## பெயர்ப் பொருத்தம் !

பையன் :—ஸார், திருவாசகம் என்றால் என்ன ?

அவர் :—இது தெரியாதா ? அது சைவசம்பந்தமான பக்திப் பாடல்கள் அடங்கிய



ஒரு புஸ்தகம். அது இருக்கட்டும், உன் பெயர் என்ன, தம்பி ?

பையன் :—என் பெயர் மாணிக்கவாசகன் !



# ஞானம்பிகை

பகீரதன்

சீருப்பூர் குஞ்சிதபாத முதலியார் வீட்டில் தடபுடலாகக் கல்யாண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஞானம்பிகை முதலில் கல்யாணமே வேண்டாம் என்று சொன்னாள். ஞானத்தின் பேச்சைக் காதில் போட்டுக் கொள்வாரே கிடையாது. காரியம் மிஞ்சிவிடும் என்று பயந்த ஞானம்பிகை தன் தாயாரிடம் தன்னுடைய எண்ணத்தைச் சொல்ல முயன்றாள். பல தடவை முயன்றும் அவளால் முடியவில்லை. கடைசியில் வெட்கத்தை விட்டு உடல் நடுங்க, கண்ணீர் ததும்ப, வாய்குழறச் சொல்ல ஆரம்பித்தாள்:

"ஏன், அம்மா! அப்படித்தான் கலியாணம் செய்ய வேண்டுமானால் பட்டணத்தில் இருக்கிறாரே, நம்ம அத்தையின் பிள்ளை — அவரைப் பண்ணிக் கொண்டால் போகிறது!" என்று சொல்லி முடிப்பதற்குள் ஒரு தரம் செத்துப் பிழைத்தாள்.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த குஞ்சிதபாத முதலியார், "ஞானம் என்ன சொல்லுகிறாள்?" என்று தம் மனைவியைக் கேட்டு விஷயத்தைத் தெரிந்து கொண்டு, "ஞானம்! நீ இப்படி அசடாக இருப்பாய் என்று நான் நினைக்கவேயில்லை. உலகத்துக் கஷ்ட சுகங்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? அந்தப் பயலுக்கு என்ன இருக்கிறது? எம். ஏ. படிப்பும் சிவந்த மேனியும் மட்டும் இருந்தால் போதுமா? எந்தக் கம்பெனியிலோ அவன் குமாஸ்தா வேலையில் இருக்கிறானாம். அதுவும் நிஜமோ பொய்யோ, தெரியவில்லை. அந்த வேலைதான் நிச்சயமான வேலை என்று சொல்ல முடியுமா? அவனே சரியாக நடந்து கொண்டா விட்டாலும் போச்சு; முதலாளியே பார்த்துத் தள்ளிவிட்டாலும் போச்சு! இதோ பார், இது மாதிரி நூறு கம்பெனியிலிருந்து நான் அவதிப்பட்டிருக்கிறேன். பணம் இல்லாவிட்டால் இந்த உலகத்தில் மதிப்பே கிடையாது. இப்பொழுது நிச்சயத்திருக்கிற வரன் சாமான்யமானவனல்ல. பரம்பரையான பணக்காரக் குடும்பம். பெரிய உத்தியோகம். பங்களாவும், மோட்டாரும், ஆட்களும் — அடாடா! கனவில்கூட நாம் நினைத்திருக்க முடியாதே!" என்று ஒரு பெரிய பிரசங்கம் செய்து விட்டுப் போய் விட்டார்.

ஞானத்துக்கு அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் மனதில் சம்மட்டி கொண்டு அடிப்பது போல இருந்தது. அதனால் அவளுடைய இதயம் வெடிக்காமல் இருந்ததை நினைத்து அவளே ஆச்சரியப் பட்டாள். பெண் இனத்துக்கு இருக்கும் இந்த நீங்காத அடிமைத்தனத்தை நினைத்து நினைத்து வேதனைப் படுவதைத் தவிர அவளால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஒரு சுப தினத்தில் சௌபாக்யவதி ஞானம்பிகைக்குத் திருமணம் பெரிய திருவிழா போல விமரிசையாக நடந்தேறியது. கலியாணத்துக்குத் தன் அத்தை மகன் மருதவாணன் வருவான் என்று எவ்வளவோ ஆவலுடன் எதிர்பார்த்த ஞானத்தின் கடைசி ஆசையும் நிறைவேறாமல் போகவே, திடீரென்று இந்தப் பூமி பிளந்து தன்னை விழுங்கிவிடக் கூடாதா என்று அவள் நினைத்தாள்.

தனக்கு அருமை மருமகளாக ஞானம்பிகைதான் வருவாள், அவளைத்தான் தன் மகனுக்குத் தாரமாகக் கொள்ளவேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்த அத்தை தனபாக்கியம், ஞானம்பிகையின் கலியாணப் பத்திரிகையைப் பார்த்தவுடன் திடுக்கிட்டாள். தன்னுடைய ஒன்று விட்ட சகோதரரான குஞ்சிதபாத முதலியாரைச் சொந்த சகோதரர் போலவே அவள் பாவித்து வந்தாள். இரண்டு வருஷங்களுக்கு முன் இரண்டுமாதக் கோடை விடுமுறையில் தன் மகன் மருதவாணன் கருப்பூருக்குச் சென்று வந்ததிலிருந்து, ஞானத்தை மருமகளாகக் கொள்ளும் ஆசை இன்னும் அதிகமாகி யிருந்தது. கடைசியில் தன்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் கலியாணத்தை முடித்து விட்டதை நினைத்துத் தலையில் கையை வைத்துக் கொண்டு தூணில் சாய்ந்து விட்டாள். இப்படி எத்தனை நாழி இருந்தாளோ, "அம்மா!" என்ற மருதவாணனின் குரல் கேட்டு எழுந்தாள்.

"ஏன் அம்மா, இப்படி உட்கார்ந்திருக்கிறாய்?" என்று அன்பு கனியக் கேட்டான் மருதவாணன்.

ஞானத்தின் கலியாணப் பத்திரிகையை எடுத்து அவனிடம் கொடுத்துவிட்டு, புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டே உள்ளே போய்விட்டாள் தனபாக்கியம்.

மருதவாணன் இருட்டிலும் வெளிச்சத்திலுமாகப் பல தடவை அந்தப் பத்திரிகையைப் படித்தான். அவனுக்கு இன்னது செய்வதென்றே புரியவில்லை. தலையில் யாரோ கல்லைத் தூக்கிப் போட்டுச் சுக்கு நூறாக்கிவிட்டது போல வேதனைப் பட்டான். இந்த நிலையில் அவனுடைய மனம் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் சென்றது.

• • •

வில்லம்புழகை ஸ்டேஷனில் தனக்காக வந்திருந்த இரட்டை மாட்டு வண்டியில், தன்னுடைய பெட்டி படுக்கையுடன் ஏறி உட்கார்ந்தான் மருதவாணன்.

மேற்குத் திசையில் சூரியன் தன்னுடைய செங்கதிர்களால் வானத்தை செந்நிறமாக்கி, அதில் எத்தனை எத்தனையோ விதவிதமான வர்ண ஜாலங்களைக் காட்டிக் கொண்டிருந்தான். சாலையின் இரு புறங்களிலும் இயற்கையாகச் செழித்து வளர்ந்திருந்த மரங்களிலே புள்ளினங்கள் அற்புதமாகப் பாடிக் கொண்டிருந்தன. சாலையிலிருந்து கன்றை மறந்து மேய்ந்து கொண்டிருந்த பசுக்கள் மந்தை மந்தையாகக் கன்றைத் தேடி வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தன. இவையெல்லாம் பட்டணத்தில் தார் போட்ட ரோட்டையும் டிராம் வண்டியையும் பார்த்துப் பார்த்து அலுத்துப் போன மருதவாணனுக்குத் தனி இன்பத்தையும் சந்தோஷத்தையும் கொடுத்தன.

அமைதி நிறைந்த கொள்ளிடக் கரைச் சாலையில் ஆடி ஆடிக் கொண்டு போய்க் கொண்டிருந்த இரட்டை மாட்டு வண்டியில் ஸவாரசிகமாக ஒரு வாலிபன் உட்கார்ந்திருப்பதை அந்தச் சாலை வழியே போய்க் கொண்டிருந்த பாட்டைசாரிகள் வெறிக்க வெறிக்கப் பார்த்தார்கள். திடீரென்று எங்கிருந்தோ 'கலீர்' என்ற சிரிப்புச் சத்தம்



வந்து அவன் சிந்தனையைக் கலைத்தது. திரும்பிப் பார்த்தான். காலைத்து இளம் பெண்கள் கொள்ளிடத்தில் குடி தண்ணீரை மொண்டு கொண்டு எதைப் பற்றியோ பேசிச் சிரித்துக் கொண்டே சென்று கொண்டிருந்தனர். இடுப்பில் குடத்தை ஏந்திய ஒரு பெண், தன்னையும் வண்டியையும் மருண்டு மருண்டு பார்த்து விட்டுப் போனது, மருதவாணனின் மனதை என்னவோ செய்தது.

'ஆகா! இந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணிடத்தில் இவ்வளவு அழகைக் கொட்டியிருக்கிறானே ஆண்டவன்!' என்று வியந்தான். அவசியமிருக்கிறதோ, அழகு என்று நினைத்தோ கண்ணுக்குக் கண்ணாடி போட்டுக் கொள்வது, பின்னியும் பின்னாமலும் இருக்கும் கூந்தலிலே வாசனையற்ற கனகாம்பர மலரைச் சுமந்து கொள்வது, அதில் 'ரிப்'பனைக் கொண்டு கோணல் மாணலாக முடிபோட்டுக் கொண்டு, முகத்தில் முக்கால் அங்குலத்துக்குப் பவுடரைப் பூசிக்கொண்டு ஒய்யாரமாகச் செல்வது — இந்த லட்சணத்தில் பட்டணத்துப் பெண்களைப் பார்க்கும்போதெல்லாம் அதுதான் நாகரிகம், பட்டிக் காட்டுப் பெண்களுக்கு நாகரிகம் என்பதே தெரியாது என்று அவன் எண்ணுவான். அந்த எண்ணம் எவ்வளவு முட்டாள்தனமானது என்பதை இடுப்பில் லாகவமாகக் குடத்தை ஏந்திய காட்டுப் புறத்துப் பெண்ணின் இயற்கை அழகும் மருண்ட பார்வையும் அவனுக்கு எடுத்துக் காட்டிவிட்டன.

அதே சிந்தனையில் லயித்து ஏதோ ஒரு உலகத்தில் சஞ்சரித்த வண்ணம் வந்து கொண்டிருந்த அவனை, "மருதவாணு! வாடா, கண்ணு! அம்மா சௌக்கியமா?" என்ற அத்தையின் குரல் இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது.

வண்டியை விட்டுக் கீழே இறங்கி உள்ளே சென்றான் மருதவாணன். "ஞானம்! மருதவாணனைத் தெரிகிறதோ?" என்று அடுப்பங் கரையிலிருந்து எட்டிப் பார்க்கும் பெண்ணைக் கேட்டாள் அத்தை.



"தெரியாமல் என்ன?" என்ற பதில் மருதவாணன் காதில் தேனைப் பாய்ச்சியது.

"அவளுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான் மருதவாணன்.

"அவள் சிறு பெண்ணாக இருக்கும்போது ஒருதரம் பட்டணத்துக்கு வந்திருக்கிறாள். அன்றைய தினத்திலிருந்து அவள் உன்னை மறக்கவில்லை; நீதான் மறந்து விட்டாய்!" என்றாள் அத்தை.

வழியில் அந்தப் பெண் தன்னைப் பார்த்துக் 'கலீர்' என்று சிரித்த காரணம், இப்போது தான் மருதவாணனுக்குத் தெரிந்தது. தன் மறதியை எண்ணி எண்ணி மனம் புழுங்கினான்.

மத்தியானம் சாப்பிடும்போது ஞானம்தான் மருதவாணனுக்குப் பரிமாறினாள்.

"சமையல் ரொம்ப ஜோர்! இந்தத் தக்காளிப்பழ ரசம் ரொம்ப சுவையாக இருக்கிறது!" என்று சமையலையும் ரசத்தையும் புகழ்ந்தான் அவன்.

"எல்லாம் ஞானத்தின் சமையல்தான்!" என்றாள் அத்தை.

மருதவாணன் கடைக்கண்ணால் ஞானத்தைப் பார்த்தான். நாணத்தினால் சிவந்திருந்த ஞானத்தின் முகத்திலே சந்தோஷமும் தாண்டவமாடியது.

சாப்பாட்டுக்குப் பிறகு, "இங்கே பொழுது போவதே கஷ்டமாயிருக்கிறது, அத்தை! பட்டணத்திலே நேரம் போவதே தெரியாது. நீங்கள் எல்லாரும் எப்படித்தான் பொழுதைப் போக்குகிறீர்களோ, தெரியவில்லை!" என்றான் மருதவாணன்.

"ஏன், இங்கே நல்ல புத்தகங்கள் இருக்கின்றன; ராட்டை இருக்கிறது. பொழுது போவதற்கு என்ன?"

"ராட்டை இருந்து என்ன பயன்? எனக்கு நூற்கத் தெரியாதே!"

"ஞானம் ரொம்ப நன்றாக நூற்பாள். போன மாதம் நடந்த நூற்புப் போட்டியிலே காந்திப் பதக்கம்கூடப் பெற்றிருக்கிறாள். நீ அவளிடம் கற்றுக்கொள்ளேன்!"

மருதவாணனுக்கு ஞானம்பிகையுடன் நெருங்கிப் பழகுவதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. அன்றே நூற்கக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தான். சேர்ந்தாற்போல் இரண்டு கஜம் நூற்பதற்குள் பத்து தரம் ஞானத்தின் உதவியை நாடுவான். அவளும் அலுக்காமல் அவனுக்குச் சொல்லிக் கொடுப்பாள். நாளடைவில் இரண்டு பேரும் போட்டி போட்டுக் கொண்டு நூற்க ஆரம்பித்தார்கள். போட்டியில் தோல்வி மருதவாணனுக்குத்தான் என்று சொல்ல வேண்டுமா, என்ன?

ராட்டை சுற்றிய நேரம் போக மற்ற நேரங்களில் எல்லாம் ஞானம்பிகையுடன் கொள்ளிடக்கரை ஓரமாக உலாவுவதும், மாலை வேளையில் கொள்ளிடத்து வெண் மணலிலே உட்கார்ந்து இயற்கை அழகைப் பற்றிப் பேசிப் பேசி அனுபவிப்பதுமாக நாட்களைக் கழித்தான் மருதவாணன். கிராமத்தில் ஒரு வாரத்துக்குமேல் தங்குவதில்லை என்று வந்த அவனுக்குக் கருப்பூர் சுவர்க்கப் பூமியாகக் காட்சி அளித்தது. இரண்டு மாதங்களும் இரண்டு நாட்கள் போல மாயமாய் மறைந்துவிட்டன.

• • •

ஊருக்குப் போவதற்காக வண்டி வந்து வாசலில் தயாராக நின்றது. மாமாவிடமும் அத்தையிடமும் விடை பெற்றுக் கொண்டு ஞானத்தைப் பார்த்தான் மருதவாணன். செந்தாமரை மலரைப் போலிருந்த ஞானத்தின் முகம் வெண்தாமரையைப் போல வெளுத்து வாடியிருந்தது. "போய் வரட்டுமா?" என்று மருதவாணன் ஈனஸ்வரத்தில் கேட்டான்.

"என்னை மறந்துவிடாதீர்கள்!" என்று சொல்லும்போது, ஞானத்தின் இரண்டு கண்களும் கண்ணீரில் மிதந்தன. அந்தப் பரிதாபக் காட்சியைப் பார்க்க முடியாத மருதவாணன் உடனே வண்டியில் ஏறிக் கொண்டான். சாலையில் உள்ள மேடு பள்ளங்களினால் ஏற்படும் வண்டியின் ஆட்டமும், வண்டிக்காரன் அடிக்கடி மாட்டை அதட்டி ஓட்டும் சத்தமும்தான் வண்டியில் உட்கார்ந்திருக்கிறோம் என்ற நினைவை அவனுக்கு ஊட்டிக் கொண்டிருந்தன.

பட்டணத்துக்கு வந்த மருதவாணன் தன் தாயாரிடம் ஞானத்தைப் பற்றியும் அத்தையைப் பற்றியும் என்னவெல்லாமோ ஓயாமல் சொல்லிக் கொண்டே போனான்.

அலுத்துப் போன அவன் தாயார், "உன்னை விட்டுவிட்டு அவள் எங்கே போய்விடப் போகிறாள்? வா, சாப்பிடலாம்" என்று அழைத்து, அவன் பேச்சை முடித்து வைத்தாள்.

• • •

ஞானத்துக்குக் கல்யாணமாகி எட்டு வருஷங்கள் ஓடி மறைந்துவிட்டன. "அதற்குள் எட்டு வருஷமா?" என்று எண்ணி நீங்கள் ஆச்சரியப்படலாம். உங்களுக்குக் கல்யாணமாகி எத்தனை வருஷங்கள் ஆகின்றன என்று எண்ணிப் பாருங்கள். நேற்று நடந்ததுபோல் இருக்கும் சம்பவங்கள் எல்லாம் எத்தனையோ வருஷங்களுக்கு முன்னால் நடந்தவையாக இருக்கும்.

தாய் தந்தையரின் இஷ்டப்படி ஞானம் தன் கணவர் வீட்டில் ஸுகபோகமாய் வாழ்கிறாள். ஒரு பெண் குழந்தை பிறந்து ஆறு வயதாகிறது. ஞானத்தின் செல்வக் களஞ்சியமாயிருக்கிறாள் குழந்தை லக்ஷ்மி. எல்லாம் இருந்தும் என்ன பயன்? ஞானத்தின் தீராத மனவியாதி இருதய வியாதியாகி விட்டது. சந்தோஷம் அற்றவளாய், தேக ஆரோக்கியம் அற்றவளாய்க் கலை இழந்து நாளுக்கு நாள் மெலிந்து கொண்டே வந்தாள். உடம்பு சௌகரியத்துக்காகக் கொஞ்ச காலம் கொடைக்கானலில் வாசம் செய்யும்படி டாக்டர்கள் யோசனை சொன்னார்கள்.

அதன்படியே ஞானம் கோடைக்கானலுக்குச் சென்றாள். ஒரு நாள் அவளும் அவள் மகளுமாக மலைச்சாரலின் ஓரத்தில் உலாவிக் கொண்டிருந்தார்கள். குழந்தை லக்ஷ்மி, "அம்மா! அதோ தூரத்தில் ஒரு குழந்தை தனியே விளையாடுகிறதே, நானும் அதோடு விளையாடிக் கொண்டிருக்கட்டுமா?" என்றாள்.

"சரி" என்று குழந்தையை விளையாட விட்டுவிட்டு, ஞானமும் அங்கேயே உட்கார்ந்தாள்.

சிறிது நேரத்துக் கெல்லாம் "ஞானம்! ஞானம்!" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டு ஞானாம்பிகை திடுக்கிட்டாள்.

எங்கிருந்தோ வந்த மருதவாணன், "இப்படித் தனியே வரலாமா, ஞானம்!" என்று கேட்டுக் கொண்டே லக்ஷ்மியுடன் விளையாடிக் கொண்டிருந்த பெண் குழந்தையைத் தூக்கிக்கொண்டு, அதற்கு ஒரு முத்தம் கொடுத்தான்.

எதிர்பாராதவிதமாக மருதவாணனையும் அவன் மகளையும் ஏககாலத்தில் பார்த்த ஞானாம்பிகை ஸ்தம்பித்து நின்றாள்.

கைதேர்ந்த சிற்பியினால் செதுக்கிய தந்த விக்கிரகம் போலிருந்த ஞானாம்பிகை, எலும்புந் தோலுமாக உருமாறியிருந்ததால் மருதவாணனால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

மருதவாணனை அடையாளம் தெரிந்து கொண்ட ஞானாம்பிகை மட்டும் அவனுடன் பேச முயன்றாள். ஆனால் அலைமேல் அலையாகப் பொங்கிப் பொங்கி எழுந்த எண்ணங்கள் அவள் சப்த நாடியையும் ஒடுக்கி அவளை நிர்ஜீவனாக்கி விட்டது. ஆனாலும் அவன் தன் குழந்தைக்குத் தன்னுடைய பெயரை வைத்திருப்பதன் மூலம் தன்னை இன்னும் மறக்கவில்லை என்பதை அறிந்து கண்ணீர் உகுத்தாள்.

மருதவாணன் அவளை நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை. குழந்தை ஞானத்தைத் தூக்கிக் கொண்டு, லக்ஷ்மியின் கன்னத்தில் ஆசையுடன் இலேசாக ஒரு தட்டுத் தட்டி விட்டு, அங்கிருந்து நடந்தான்.

ஞானாம்பிகை பேயறைந்தவள் போல் செயலற்று நின்று அவன் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டிருந்தாள்.




"ஐயையோ! என்னங்க இது? ஸ்பூன்களை யெல்லாம் இப்படி வளைந்து வளைந்துப் போட்டிருக்கிறீங்களே?"
"என்மேலே தப்பு இல்லை, அப்பா! உங்கள் மெது வடையைக் கொஞ்சம் மெதுவா யிருக்கும்படிச் செய்யக் கூடாதா!"



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த்
மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ரமாகாந்த் அவளை எப்படிச் சமாதானப் படுத்துவது என்று சிந்தித்தவாறே, மெதுவாக அவள் பின்னாலேயே சென்றான். பத்மா உயரே சென்று தன் படுக்கையை எடுத்துச் சுற்றலானாள். ரமாகாந்த் அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "அதெல்லாம் நீ உன் பிறந்தகத்துக்குப் போகக்கூடாது!" என்றான்.

பத்மா புருவத்தை நெரித்துக் கொண்டு, "போகத்தான் போவேன்" என்று கண்டிப்பான குரலில் சொன்னாள். பிறகு, தன் கையை விடுவித்துக்கொண்டு மறுபடியும் படுக்கையைச் சுற்றினாள். ரமாகாந்த் முகத்தில் வருத்தம் தாண்டவமாட, ஓர் ஓரத்தில் நின்றுகொண்டான். பத்மா படுக்கையைக் கட்டி வைத்த பிறகு பெட்டியை எடுத்து வைத்துக்கொண்டு சுத்தம் செய்ய ஆரம்பித்தாள். ஆனால் அவளுக்கு முன்பிருந்த ஆத்திரம் அடங்கிவிட்டது. அர்த்தமில்லாமல் பெட்டியைத் திறப்பதும் சாத்துவதுமாக ஏதோ செய்யலானாள்.

மழை விட்டு விட்டது; ஆனால் தூவானம் தான் விடவில்லை!

கடைசியில் தான் கட்டிவைத்த படுக்கையின் மீதே உட்கார்ந்துகொண்டு, "எதற்காக இப்படியெல்லாம் தடுக்கிறீர்களாம்?" என்று கேட்டாள்.

ரமாகாந்தின் உள்ளத்தில் சிறிது நம்பிக்கை உதித்தது. "தடுக்காமல் என்ன செய்வது? என்னைத் தன்னந் தனியே விட்டுவிட்டு நீ மட்டும் போகலாமோ?" என்று கேட்டான்.

"அப்படியானால் நான் இங்கேயே புழுங்கிச் சாகவேண்டும் என்பதுதான் உங்கள் ஆசையோ?"

"எதற்காக இப்படி வாயில் வராத தகாததையெல்லாம் அசட்டுப் பிசட்டு என்று சொல்லுகிறாய்? நீ போய்த்தான் ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தால் நான் கொண்டுபோய் விட்டு விடுகிறேன். அப்புறம் கடவுள் விட்ட வழி விடட்டும். ஆனால், அப்பா—அம்மாவின் மனம் நோகாமல் நீ அவர்களைக் கேட்டுக்கொண்டு போ! எனக்கு ஆட்சேபணையில்லை" என்றான் ரமாகாந்த்.

இந்தச் சொல் பத்மாவுக்கு எரியும் தீயில் எண்ணெய் விட்டது போலாயிற்று. "வேண்டவே வேண்டாம். எனக்கு வேண்டியவர்களாயிருந்தால், இப்படிப் பேசாமல் இருப்பார்களா? கையில் காசை வைத்துக் கொண்டிருக்கும் இவர்கள் ஏதாவது இரண்டு நகைகள் செய்து போட்டிருக்க மாட்டார்களா? நீங்களே சொல்லுங்கள். வெளியே வருவதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு நான் இந்த அறைக்குள்ளேயே எவ்வளவு நாள் அடைந்து கிடப்பது? அவர்களாவது, இனிமேல் நகைகள் செய்து போடவாவது? எனக்கு நம்பிக்கையில்லை. இன்னும் இரண்டு பிள்ளைகள் இருக்கும்பொழுது அவர்களுக்குச் சேர்த்து வைப்பார்களா, எல்லாவற்றையும் உங்களுக்கே கொடுத்து விடுவார்களா? யோசித்துப் பாருங்கள்!" என்றாள் பத்மா.

ரமாகாந்துக்குக் கதை அளக்கச் சௌகரியமான சந்தர்ப்பம் கிடைத்தது. "நீ சொல்வது உண்மைதான். அப்படித்

தான் இருக்கும். இல்லாவிட்டால் அவர்களுக்கு இரண்டாயிரம்—மூவாயிரம் என்பது அவ்வளவு பிரமாதமான விஷயம் ஒன்றும் இல்லையே!"

"எப்படி யிருந்தால் என்ன? உங்கள் அப்பா—அம்மா சுத்த வடிகட்டின கருமிகள்!"

"அப்படி வடிகட்டின கருமிகளாக இல்லாவிட்டால் இவ்வளவு சொத்துக்களைச் சேர்த்திருக்க முடியுமா?"

"இவர்கள் பணக்காரர்களாயிருந்தால் எனக்கு என்ன ஆயிற்று? பணத்தை வைத்துக் கொண்டு இவர்கள் ஊறுகாய் போடட்டும். எங்கள் வீட்டிலும் ஒன்றுக்கும் குறைவில்லை. இந்தச் சோறு அங்கேயும் எனக்குக் கிடைத்துவிடும். இங்கு கிடந்து மடிவதை விட அங்கே போயிருப்பது எவ்வளவோ தேவலை."

"உனக்கென்ன? பிறந்தகம் இருக்கிறது. குஷியாக அங்கே போய் இருப்பாய்! என் தலையில் இந்த வீட்டிலேயே வாடி வதங்கி மடிய வேண்டும் என்றுதானே எழுதி யிருக்கிறது? அன்றைக்குத் திருட்டுப் போனதிலிருந்து என் மனம் படும் பாடு எனக்குத்தான் தெரியும். அப்பா—அம்மாவிடம், 'உனக்கு இரண்டொரு நகைகளாவது செய்துபோட வேண்டும்' என்று எவ்வளவு தடவை சொல்லி யிருப்பேன், தெரியுமா?"

"அவர்கள் எப்படியாவது போகட்டும். நீங்கள் எங்கேயாவது ஒரு வேலை தேடிக் கொண்டு, என்னை அழைத்துக் கொள்ளுங்கள். அதுவரை நான் பிறந்தகத்தில் இருக்கிறேன்."

"நீ சொல்வதற்கு முன்னாலேயே நானும் அதுதான் தேடிக் கொண்டிருக்கிறேன். சீக்கிரமே கிடைத்து விடலாம். எவ்வளவோ பெரிய மனிதர்களை யெல்லாம் எனக்குத் தெரியும்........."

"அவர்களிடம் வேலைக்குச் சொல்லிப் பார்க்கக் கூடாதோ?"

"சொல்லுவது என்றால் கொஞ்சம் சங்கோசமாக இருக்கிறது......"

"சங்கோசமாயிருந்தால் கடிதம் எழுதிப் போடுங்கள்!"

"பேஷான யோசனை! நாளைக்கே கடிதம் எழுதிவிடுகிறேன்."

"என்னை ஊருக்குக் கொண்டு போய் விட்டு விட்டு வந்த பிறகு எழுதுங்கள்."

"நீ கட்டாயம் ஊருக்குப் போய்த்தான் ஆகவேண்டுமா? நீ போன பிறகு எனக்குக் கடிதம் எழுதத்தான் மனம் ஓடுமா? நீ ஊருக்குப் போய்விட்டால் நானும் எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிப் போய் விடுவேன்! நான் சொல்வதைக் கேள்!" என்று சொல்லிக் கொண்டே, ரமாகாந் அவள் கட்டி வைத்திருந்த படுக்கையை அவிழ்த்தான்.

"'இந்த ஆண் பிள்ளைகளே மந்திரவாதிகள்' என்று எனினி அடிக்கடி சொல்லுவாள். எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும் நான் இன்றைக்குக் கட்டாயம் ஊருக்குப் போவது என்று தீர்மானித்திருந்தேன். நீங்கள் என்னடா வென்றால், அந்தத் தீர்மானத்தை ஒரே நிமிஷத்தில் இப்படிக் காற்றில் பறக்கவிட்டு விட்டீர்களே! சரி, சரி; நீங்கள் ஏதாவது சம்பாதிக்காமற் போனால் இந்த வீட்டில் நான் இருக்கவே முடியாது. நாளைக்கே கடிதம் எழுதிப் போடுங்கள்!"

"நாளைக் கென்ன? இதோ, இப்பொழுதே எழுதுகிறேன்!" என்று எழுந்தான் ரமாகாந்.

பெண்களின் அன்பு நிறைந்த பிடிவாதத்தில்தான் ஆண்களைக் கொண்டு எந்தக் காரியத்தையும் சாதித்துக் கொள்ளும் சக்தி வெகுவாக நிறைந்திருக்கிறதே!

## — ஒன்பதாம் அத்தியாயம் —

## சதுரங்கம்

ரமேஷ்பாபு என்பவர் ரமாகாந்துக்கு மிகவும் வேண்டியவர்களில் ஒருவர். அவர் முனிஸிபல் ஆபீஸில் ஹெட்க்ளார்க்கு வேலை பார்த்து வந்தார். வயது ஐம்பதுக்கு மேலிருக்கும். ஆனால் வெகு 'குஷி'ப் பேர்வழி. சதுரங்கம் ஆடுவதற்கு உட்கார்ந்து விட்டாரானால் அவருக்குப் பொழுது போவதே தெரியாது. அன்ன—ஆகாரம், ஆபீஸ் எல்லாவற்றையுமே மறந்து ஆட்டத்தில் லயித்துவிடுவார். அவரை 'ஏன்' என்று கேட்பார் யாருமே அவருடைய குடும்பத்தில் இல்லை. கல்யாணம்

ஆன சில வருஷங்களுக்குள்ளேயே அவருடைய மனைவி இறந்துவிட்டாள். அதற்குப் பிறகு அவர் மறு விவாகமே செய்து கொள்ளவில்லை. அவருக்குத் தன் ஏகாந்தமான வாழ்க்கையில் ஆடிப் பாடிப் பொழுதைப் போக்குவதைத் தவிர வேறு வழி ஏதாவது தென்பட்டால்தானே!

ரமாவிடம் அவருக்குத் தனியான பற்றுதல் உண்டு. நினைத்தபொழுது சதுரங்கம் ஆட ரமாநாத்தைத் தவிர வேறு யார் வரப் போகிறார்கள்? அவனோ வேலை வெட்டியில்லாதவன். ஆகையால் சமய சஞ்சீவியாக அவருக்கு இவ்விஷயத்தில் கை கொடுத்து உதவி வந்தான். சில தினங்களாக ஏனோ அவனும் வருவதை நிறுத்திக் கொண்டு விட்டான். வெற்றிலை போட்டுக் கொள்ளும் பழக்கமுள்ளவர்கள் வெற்றிலை போட்டுக் கொள்ளாமல் இருந்தால், ஏதோ பித்துப் பிடித்த மாதிரி இருக்கிறது என்று சொல்லுகிறார்கள் அல்லவா? அதே போல அவருக்கும் சில தினங்களாகச் சதுரங்கம் ஆடாமல் இருந்துவிட்டது, மனதை என்னவோ செய்தது.

எவ்வளவு நேரம்தான் பத்திரிகையை வைத்துக் கொண்டு அழுவது? அது அவருக்கு அலுத்துவிட்டது. 'வேறு என்ன செய்யலாம்?' என்று யோசித்தார். சினிமாவுக்குப் போகலாமா? என்ன சினிமா வேண்டிக் கிடக்கிறது? அதை விட்டால் நமக்கு வேறு கதி?' என்று பலவாறு அவர் மனம் போராடியது. கடைசியில் 'சினிமாவுக்கேதான் போய் வருவோம்' என்று மனதைத் தேற்றிக்கொண்டு எழுந்தார். அவர் 'டிரஸ்' செய்துகொண்டு புறப்படுவதற்கும், ரமாநாத் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது.

ரமேஷ் பாபுவுக்கு அவனைக் கண்டதும் சந்தோஷம் எல்லை கடந்து விட்டது. "வாருங்கள், வாருங்கள்! இப்பொழுதெல்லாம் நீங்கள் ரொம்ப ரொம்பப் பெரிய மனிதராகி விட்டீர்கள்! இல்லாவிட்டால் இந்தக் கிழத்தை இப்படித் திடீரென்று மறந்து விடுவீர்களா? ஆமாம், இனிமேல் நான் எதற்கு? பெண்டாட்டியின் முகத்தைப் பார்ப்பதற்கும், அவள் பேச்சைக் கேட்பதற்குமேதான் உங்களுக்குப் பொழுது சரியாயிருக்குமே......!"

"நீங்களாவது, நாங்களாவது! நான் இன்னும் அவ்வளவு பெரிய மனிதனாகிவிடவில்லையே......!"

"சரி, அது போகட்டும்; திருட்டுச் சமாசாரம் ஏதாவது தெரிந்ததா?"

"தெரியவாவது, கிரியவாவது! போனது, போனதுதான்!"

"நல்ல வேளை! போலீஸிலே போய் எழுதி வைக்காமல் இருந்தாயே! அது வரைக்கும் க்ஷேமம். எழுதி வைத்திருந்தால் அதற்கு வேறல்லவா இருநூறு — முந்நூறு என்று தண்டம் அழுது தொலைத்திருக்க வேண்டியிருந்திருக்கும்!—பாவம், அந்தப் பெண்தான் ரொம்ப வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்!"

"அவள் படும் வருத்தத்தை என்னவென்று சொல்லுவது, போங்கள்! 'இரவுக் கிரவே எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிப் போய்விட்டால் என்ன?' என்றுகூடத் தோன்றுகிறது. அப்பாவோ 'கம்' மென்று இருக்கிறார்!"

"அவரிடம் லட்சம் லட்சமாகக் கொட்டி வைத்திருக்கிறதா, என்ன? அவர் என்ன செய்வார், பாவம்! இப்பொழுதுதானே நாலாயிரம், ஐயாயிரம் என்று செலவு செய்திருக்கிறார்!"

"என்னமோ பெரிய ஆபத்தில் நான் மாட்டிக்கொண்டு விட்டேன். எங்கேயாவது வேலை தேடிக் கொண்டால்தான் பிழைக்கலாம் போலத் தோன்றுகிறது. உங்களுக்குத் தெரிந்த இடத்தில் எங்கேயாவது வேலை கிடைக்குமோ?" என்றான் ரமாநாத்.

ரமேஷ்பாபு மாடத்தில் இருந்த சதுரங்கக் காய்களையும், போர்டையும் எடுத்துக் கீழே வைத்துக் கொண்டே, "உட்காரு, சொல்லுகிறேன். முதலில் ஒரு ஆட்டம் போடுவோம்!" என்றார்.

"எனக்கு மூளையே குழம்பிக் கிடக்கிறது. அதெல்லாம் விளையாடவே முடியாது!"

"உட்காரு அப்பா, சொல்லுகிறேன். ஒரு ஆட்டம் ஆடினால் தானாக மூளை வேலை செய்யும்."

"என்ன ஸார், ஆட்டம் வேண்டிக் கிடக்கிறது? 'கக்கலாம் பாதாம்' குட்டிக் கொள்ளும் பொழுதே இது மாதிரி யெல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால், நான் இந்தக் கல்யாணத்தின் வழியே போயிருக்க மாட்டேன். இப்பொழுது என்னடா வென்றால் பிராணனையே அல்லவா வாங்கி விடும்போலிருக்கிறது!"

"அப்படி யெல்லாம் வீண் கவலைப் படாதே! உட்காரு, சொல்லுகிறேன்" என்று ரமாநாத்தைத் 'தாஜா' செய்து, ஆட உட்கார வைத்து விட்டார் ரமேஷ்பாபு.

சற்று நேரம் ஆடிய பிறகு, ரமேஷ்பாபு ரமாநாத்தின் காய் ஒன்றை வெட்டினார்.



ரமாகாந்த், "அடாடா! தவறியல்லவா ஆடி விட்டேன்!" என்றான்.

ரமேஷ்பாபு வதனத்தில் வெற்றிக் குறி தாண்டவமாட, "பேஷ்! முதல் போனி நல்ல போனியாய் விட்டது. ஜயம் நமக்குத் தான்!—ஆமாம், உனக்கு ஒரு இடம் இருக்கிறது. ஆனால் சம்பளம் குறைச்சலாயிருக்குமே! முப்பது ரூபாய்தான் கொடுப்பார்கள். உனக்கு அந்தத் தாடிக்காரச் சாயபுவைத் தெரியுமோ இல்லையோ? அவனால் சரிவர வேலை பார்க்க முடியவில்லை. எவ்வளவோ தடவை நான் அவனைத் தப்ப வைத்திருக்கிறேன். 'குழந்தைகுட்டிக்காரன் ஆயிற்றே, இருக்கிற வரை வேலை பார்த்து விட்டுப் போகட்டும்' என்று எண்ணினேன். ஆனால் அவனே, 'வேலை செய்தது போதும்; என்னை வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்' என்கிறான். உனக்கு அந்த இடம் லாயக்கில்லைதான். இருந்தாலும் உனக்குப் பிடித்தமானால் சொல்லு. என்ன? — இதோ பார், இந்த ஆனை வெட்டி விட்டேன்!" என்று ரமாகாந்தின் இன்னொரு காயையும் வெட்டினார் ரமேஷ்பாபு.

"இப்படிப் பேச்சிலேயே மடக்கி என் காய்களை வெட்டி விடுகிறீர்களே! அது நியாயம் இல்லை. இங்கே கொண்டு வாருங்கள்" என்று கூறி, ரமாகாந்த் கையை நீட்டினான்.

"நீ சொல்லுவதுதான் கொஞ்சங்கூட நியாயம் இல்லை. உன் ஆனை நான் பலவந்தப்படுத்திப் பிடுங்கிக் கொண்டேனா, என்ன? நீ கவனித்து ஆடியிருக்க வேண்டும்.—ஆமாம், உனக்கு வேலை பிடித்திருக்கிறதா?"

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"

"சம்பளம் குறைச்சலாயிருந்தாலும் இடம் மேல் வரும்படி வரக் கூடிய இடம். சாயபு இதே வேலையைப் பார்த்துத்தான் பிள்ளைகளைக் காலேஜில் படிக்க வைத்திருக்கிறான். பெண்களை கல்ய

இடத்தில் கட்டிக் கொடுத்திருக்கிறான். ஆனால், கொஞ்சம் முன் ஜாக்கிரதையோடு இருக்க வேண்டும். புரிகிறதா?"

"மேல் வரும்படி கிடக்கட்டும், ஸார்! லஞ்சம் வாங்குவது நியாயம் இல்லையே!"

"நியாயம் இல்லைதான்; ஆனால் குழந்தை குட்டிக்காரர்கள் என்ன செய்வார்கள், பாவம்! அவர்கள் முப்பது ரூபாயைக் கொண்டு எப்படி ஜீவனம் செய்ய முடியும்? என்னையே எடுத்துக் கொள்ளேன். நானோ ஒண்டிக்காரன். எனக்கு நூற்றி ஐம்பது ரூபாய்க்குமேல் கிடைக்கிறது. அதுவே எனக்குப் போதவில்லை. 'தொட்டுக் கொள்ள, துடைத்துக் கொள்ள' என்று தான் இருக்கிறது. ஆனால் பெரிய குடும்பத்தைக் கட்டியாள வேண்டியவனுக்கு முப்பது ரூபாய்ச் சம்பளம் எந்த மூலைக்கு? பின்னை குட்டிகளைப் படிக்க வைக்க வேண்டும் என்றால் அவன் எங்கே போவான்? பெண்களுக்குக் கல்யாணம் என்றால் என்ன செய்வான்? எந்தச் சாதாரணமான மனிதனுக்கும் தன் குடும்பத்தைக் கண்ணியமாக நடத்தக்கூடிய அளவுக்கு வருவாய் இல்லையென்றால், இந்த லஞ்சம் ஒழியவே ஒழியாது!" என்று சொல்லியவாறே, ரமாகாந்தின் மற்றொரு ஆளையும் வெட்டி விட்டுக் 'கட கட' வெனச் சிரிக்கலானார் ரமேஷ்பாபு.

ரமாவுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. "பேசாமல் ஆடுவதாய் இருந்தால் ஆடுங்கள். இல்லையென்றால் நான் இதோ எழுந்து போய் விடுகிறேன். பேச்சில் சிக்க வைத்துக் காய்களை எல்லாம் வெட்டி விடுவது கெட்டிக்காரத்தனம் என்று எண்ணுகிறீர்களா, என்ன?" என்றான்.

"சரி அப்பா, இனிமேல் பேசினால் 'ஏன்' என்று கேள். இதோ பார், இங்கே கட்டி விட்டேன் — நீ காலைக்கே மனுப் போடு! உனக்கு அந்த வேலை கிடைத்து விடும். வேலை கிடைத்து விட்டால், அன்று ராத்திரி பூராவும் என்னோடுகூட உட்கார்ந்து கொண்டு நீ சதுரங்கம் ஆடியாக வேண்டும், என்ன?" என்றார் ரமேஷ்பாபு.

"இரண்டு ஆட்டம் ஆடுவதற்குள் தான் நீங்கள் அழ ஆரம்பித்து விடுவீர்களே?"

"நீ என்னைத் தோற்கடித்த அந்தக் காலம் மலையேறி எத்தனையோ நாளாகி விட்டது. இனிமேல் என்னைத் தோற்கடிப்பது என்றால் உன் தாத்தா வந்தாலும் முடியாது, தெரிகிறதா?"

"காலைக்கு ஆகட்டும்; உங்களை ஒரு கை பார்த்து விடுகிறேன். எண்ணி ஐந்து தடவை உங்களைத் தோற்கடிக்க வில்லையென்றால், என் பெயரையே வேண்டுமானாலும் மாற்றி வையுங்கள்!"

"போ, அப்பா! எதற்காக இந்த வீண் வாய்ச் சவடால் எல்லாம்? நீயாவது, என்னைத் தோற்கடிக்கவாவது? தைரியமிருந்தால் இப்பொழுதே ஆட வா, பார்ப்போம்."

"சரி, அப்படியானால் உட்காருங்கள். ஆனால் ஐந்து ஆட்டத்துக்குக் குறைந்து எழுந்திருக்கக் கூடாது, என்ன?"

"ஐந்தாகப் போவானேன்? பத்து வேண்டுமானாலும் நான் ஆடத் தயார். அப்படியானால் வா, ஒரே அடியாகச் சாப்பிட்டுவிட்டு வந்து உட்கார்ந்து விடுவோம். உன் வீட்டுக்கு, 'இன்று நீ வரமாட்டாய்; எதிர்பார்க்க வேண்டாம்' என்று சொல்லி அனுப்பி விடுகிறேன்" என்றார் ரமேஷ்பாபு.

போஜனத்தை முடித்துக் கொண்டு, இருவரும் மறுபடியும் சதுரங்கம் ஆட உட்கார்ந்தனர். முதல் ஆட்டம் முடிவதற்குள்ளேயே மணி பதினொன்று அடித்து விட்டது. மூன்றும் ஆட்டம் முடியும் பொழுது மணி இரண்டு. இந்த மூன்று ஆட்டங்களிலும் வெற்றி பெற்றது ரமேஷ்பாபுவே.

ரமாகாந்த், "எனக்குத் தூக்கம் வந்து விட்டது; ஆட்டம் போதும்!" என்றான்.

"அதெல்லாம், ஐந்து ஆட்டம் முடியாமல் உன்னை எழுந்திருக்க விடமாட்டேன்!"

மூன்று ஆட்டத்திலும் வெற்றி கொண்ட ரமேஷ்பாபுவுக்கு அதிர்ஷ்ட தேவதை தம் பக்கம்தான் இருக்கிறாள் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. ஆகையால் தான் பிடிவாதமாக அவனை நான்காவது ஆட்டத்துக்கும் உட்கார வைத்தார். ஆனால் நான்காவது ஆட்டத்தில் அவருக்குத் தோல்வி கிட்டி விடவே, அந்த நம்பிக்கை ஓடி ஒளிந்துகொண்டு விட்டது. "இனிமேல் தூங்க வேண்டியதுதான்!" என்று அவரே ஆரம்பித்தார்.

"ஏன், ஐந்தாவது ஆட்டத்தையும் முடித்து விடுவோமே!" என்றான் ரமாகாந்த்.

"இல்லை, காலைக்கு ஆபீஸ் போக வேண்டுமோ, இல்லையோ! போதும்!" என்றார் ரமேஷ்பாபு.

ரமாகாந்த் அதற்குமேல் வற்புறுத்த வில்லை. இருவரும் தூங்கப் போய் விட்டனர்.

(தொடரும்)

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

# பேபி கிரைப்

மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து

இது சரீரத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, சரீரத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்

IODISAL
BLOOD PURIFIER
MADURA

# அயோடிசால்

படைபற்று, சேற்றுப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட
— மருந்து —

RING WORM
SOUTH INDIAN Mfg. Co.

# சைபால்

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
தி ஸௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி
மதுரை

ஏஜண்டுகள்:—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பெர்ஹாம்பூர் & ஹைதராபாத்; மினர்வா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள்:—M. O. S. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

## தாமதியாதீர்கள்!



# பிஸ்மாக் BISMAG

## உட்கொள்ளுங்கள்!

நல்ல சாப்பாட்டுக்குப் பிறகு, இன்னும் நீங்கள் வேலைசெய்ய வேண்டியிருந்தால்—பிஸ்மாக் (பைஸ-ரேட்டட் மக்னீஷியா) உட்கொள்ளுங்கள். மிகக் கடுமையானதும் அஜீரணம், வயிற்றுப் பொருமல், வயிற்று மந்தம் இன்னும் சகலவித வயிற்றுக் கோளாறுகளுக்கும் இன்றியமையாதது.

போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

SUNSHINE




ஸன்ஷைன் கிளாக்ஸோ

குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது

இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட்.
பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - லாகூர்



குழந்தைகள் பராமரிப்பைப் பற்றிய இலவச புத்தகம் 4 அணுவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

---

# கிரைப்-டில்-வாட்டர்
# GRIPE-DIL-WATER

குழந்தைகளின் ஆரோக்கியத்திற்கு உகந்தது.
எல்லா இடங்களிலும் கிடைக்கும்

BHARATH DRUG HOUSE

Children's necessity-Pet drink of the Child-Mother's ready-at-hand remedy-for all disorders of Stomach and Children's General Tonic

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:- T.N.C. நாகலிங்கம் பிள்ளை & ஸன்ஸ், மருந்து ஷாப், மதுரை

பாட்டில் 1-க்கு ரூ. 1-4-0.

---

# சோனல்
# SONAL

முகப்பரு, வேனல் கட்டி, தீப்பட்ட ரணம் முதலியவைகளுக்குச் சிறந்த களிம்பு

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:-
T.N.C. நாகலிங்கம் பிள்ளை & ஸன்ஸ், மருந்து ஷாப், மதுரை

டப்பி 1-க்கு அணா 0-6-0.

எங்கும் கிடைக்கும்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

REGD. No. M. 4392

License No. 18
Licensed to post without prepayment